2-2/5

உ

# உபநிஷத் நாடகமாலா

## (उपनिषन्नाटकमाला)

ஈசாவாஸ்யோபநிஷத் நாடகம்
கேனோபநிஷத் நாடகம்

உபநிஷத் மந்திரங்களின்
பொழிப்புரை, கருத்துரைகளுடன் கூடியது.

திருநெல்வேலி ஜில்லா கடையநல்லூர்
கிருஷ்ணபுரம் மிட்டாதார்

**ஸ்ரீ V. S. மணி அய்யர் அவர்கள்**

எழுதியது.

வெளியிட்டோர்

**ஸ்ரீ அழகியகன்னிவிநாயகர் கோவில் டிரஸ்டு**

35/867 சபாபதி கோவில் தெரு,
சாலை, திருவனந்தபுரம்-695023.

1978

1978

2.—

உ

# உபநிஷத் நாடகமாலா

## (उपनिषन्नाटकमाला)

ஈசாவாஸ்யோபநிஷத் நாடகம்
கேனோபநிஷத் நாடகம்

உபநிஷத் மந்திரங்களின்
பொழிப்புரை, கருத்துரைகளுடன் கூடியது

திருநெல்வேலி ஜில்லா கடையநல்லூர்
கிருஷ்ணபுரம் மிட்டாதார்

**ஸ்ரீ V. S. மணி அய்யர் அவர்கள்**

எழுதியது.

வெளியிட்டோர்

ஸ்ரீ அழகியகன்னிவிநாயகர் கோவில் டிரஸ்டு
35/867 சபாபதி கோவில் தெரு,
சாலை, திருவனந்தபுரம்-695023.

1978

Price Rs. 2

உ

SRI CHANDRAMOULEESWARAYA NAMAHA

HIS HOLINESS

SRI KANCHI KAMAKOTI PEETADHIPATHI

**JAGADGURU SRI SANKARACHARYA SWAMI MUTT**

**KANCHEEPURAM-631 502**

Camp: SANKARAN KOIL 12-3-'78

நெல்லை ஜில்லா கிருஷ்ணபுரம் கடையநல்லூர் மிட்டாதார் ஸ்ரீ V. S. மணி அய்யர் B. A., B. L., அவர்கள், வேதாந்த தத்துவங்களை உபநிஷத்களை தான் சம்பிரதாயமாகப்படித்து அறிந்துகொண்டு, தான் படித்தவைகளை எளிய நடையில் எல்லோருக்கும் புரியும்படியாக சிறு சிறு புஸ்தகவடிவமாக எழுதி வெளியிடுவதை அறிந்து சந்தோஷிக்கிறோம்.

இது போன்று ஆத்மானுஸந்தானம் செய்து கொண்டிருக்கும் படியாக ஆசீர்வதிக்கின்றோம்.

நாராயணஸ்மிருதி

श्री श्री जगद्गुरु शङ्कराचार्य महासंस्थानम्, शारदापीठम्, शृङ्गेरी

PRIVATE SECRETARY
To His Holiness Sri Jagadguru
Shankaracharya, Dakshinamnaya
SRI SARADA PEETHAM
SRINGERI-577 139 KARNATAKA

Ref. No. 9003/77
Camp: Madras

Date: 26-11-77

To

MRRy Sri **V. S. MONEY** B.A., B.L.,
Mitta Mansion, Krishnapuram P. O. (627759)
Kadayanallur, Tin. Dist.

ஸ்ரீ மணி அய்யர் அவர்களுக்கு நமஸ்காரம் 12-11-77 ல் எழுதியகடிதம் கிடைத்தது. 1974 ல் பிரசுரிக்கப்பட்ட உபநிஷத் நாடகமாலா புஸ்தகம் 2-ம் பதிப்பு சமீபத்தில் வெளியிடுவதாகத் தெரியவந்தது மிகவும் சந்தோஷம். இவ்வளவு சீக்கிரம் 3-ம் பதிப்பு வரவேண்டுமானால் அதை எவ்வளவு ஜனங்கள் வாங்கிப்படித்து பயன் அடைகிறார்கள் என்று நன்றாகத் தெரிகிறது. இதை மேலும் படித்து மேலும் ஜனங்கள் படித்து உபயோகித்து பிரயோசனம் அடையவேண்டும் என்று அனுக்கிரஹித்து அருளிய மந்திராக்ஷதையும் ஸ்ரீ சாரதா சந்திரமௌளீஸ்வரபிரசாதமும் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

இப்படிக்கு,

T. தக்ஷிணாமூர்த்தி
Private Secretary
To H. H. Sri Jagadguru



தமிழ்நாடு குமரிஜில்லா தோவாளையில் குடிகொண்டு விளங்கி அருள்பாலித்து வரும் ஸ்ரீ அழகிய கன்னிவிநாயகப் பெருமாளின் திருவுருவம்.

"உருவம் பெரிததனில் உள்ளம் பெரிது
தரு நல் வரமும் பெரிதே—பருவமதில்
பெய்யும் பெருமழைபோல் பெய்
கருணை தான் பெரிதால் ஐய! பெரிதுன் அருள்"



சிறந்த தர்மிஷ்டரும் பக்திமானுமான
நூலாசிரியர் திரு: V. S. மணி அய்யர்.



ஸ்ரீ அழகியகன்னிவிநாயகப்பெருமானைப் பரதிஷ்டைசெய்து, டிரஸ்டை ஏற்படுத்திய வள்ளல் எங்கள் அன்புத்தகப்பனர் உயர்திரு: ஆ. அழகியநம்பியாபிள்ளை அவர்களும் எங்கள் அன்புத்தாயார் திருமதி அழகுபார்வதி அம்மாள் அவர்களும்.

# பதிப்புரை

"உபநிஷத் நாடகமாலா" ஈஸ-கேன-உபநிஷத்பகுதி மூன்றும் பதிப்பாக வெளிவருகிறது. மிகப்பெரிய விஷயங்களை ஸாதாரண மக்களுக்கு எளிதிற்புரியுமாறு நாடக பாணியில் அமைத்துள்ளார் இதன் ஆசிரியர் ஸ்ரீ V. S. மணி அய்யர் அவர்கள்.

அன்னூர் சிறந்த தர்மிஷ்டரும் பக்திசிரேஷ்டரும் ஸனாதன தர்மத்துக்கு அளவில்லாத தொண்டு செய்தும் வாழ்பவர் என்பதை ஆஸ்த்திக உலகம் நன்கறியும். இந்த நல்ல புத்தகத்தை வெளியிடும் வாய்ப்பை எமக்குத் தந்த பிரம்மஸ்ரீ V. S. மணி அய்யர் அவர்களுக்கு எங்கள் மனப்பூர்வமான நன்றி அறிதலைத்தெரியப் படுத்திக்கொள்கிறேன்.

நல்லமுறையில் அச்சிட்டுத்தந்த அல்லயன்ஸ் அச்சகத்தாருக்கு எங்கள் நன்றி உரியதாகுக.

அருள்நிறைந்து ஸ்ரீ முகம் தந்த ஸ்ரீ காஞ்சி புதுப் பெரியவாளுடைய திருப்பாத கமலங்களிலும் ஸ்ரீ சிருங் கேரிப்பெரியவர்களுடைய திவ்யசரணாரவிந்தங்களிலும் என்னுடைய சாஷ்டாங்கபிரணமங்களை ஸமர்ப்பித்துக் கொள்கிறேன்

ஸ்ரீ அழகியகன்னிவிநாயகர்
டிரஸ்டுக்காக

திருவனந்தபுரம்
29—3—78

ஏ. ஸுப்ரமண்யோம்

# முன்னுரை

காவ்யம் இருவகைப்படும். ஒன்று ச்ரவ்யகாவ்யம், மற்றொன்று த்ருச்யகாவ்யம். எதாவது ஒரு கதையை எடுத்துக்கொண்டு அதை விரிவாக வர்ணிக்கும் நூல் ச்ரவ்ய காவ்யமாகும். அந்த கதையையே அரங்கத்தில் நடிப்பதற்குத் தக்கதாக நாடகஉருவத்தில் இயற்றப் பட்ட நூல் த்ருச்ய காவ்யமாகும். நாடகங்கள், கதைகளை யும் அவற்றில் பொதிந்துள்ள சிறந்த கருத்துக்களையும் சுலபமாக நன்கு மனதில் பதியவைக்கின்றன. இதனால் தான் வேதாந்த சாஸ்திரக்கருத்துக்களையும் உபநிஷத் கருத்துக்களையும் நன்குவிளக்கிக்கூறி நாடக உருவில் பல நூல்களை பெரியோர்கள் இயற்றியுள்ளார்கள். இம்முறை யில் முதன் முதலாக கி.பி. 14ம் நூற்றுண்டில் தோன்றிய ஸ்ரீகிருஷ்ணமிச்ரர் என்பவர் "பிரபோத சந்திரோதயம்" என்ற வேதாந்த நாடகத்தை இயற்றியுள்ளார் இதில் பலமதங்களுடைய கொள்கைகளையும், அவைகளுக்கு பதி லுரைக்கும் தொகுதிகளையும், முடிவில் ஏற்படும் ஸித்தாந் தப்பகுதிகளையும் பல நாடக பாத்திரங்கள் மூலமாக தெ ளிவுபடுத்தியிருக்கிறார்.

இதே ரீதியில் இவருக்குப்பின் தோன்றிய ஸ்ரீ நிக மாந்த மஹாதேசிகர் தாம் இயற்றிய "ஸங்கல்ப ஸூர் யோதயம்" என்ற நாடகத்தில் விசிஷ்டாத்வைத மதஸித் தாந்தங்களை நன்கு விளக்கியுள்ளார். இதுபோலவே பல வேதாந்த நாடகங்கள் பின்னர் வெளிவந்துள்ளன.

வங்காளகவி இயற்றிய 'சைதன்ய சந்திரோதயம்' நல்லாகவி எழுதிய 'ஜீவன் முக்தி கல்யாண நாடகம்' ஆநந்தராயமகி எழுதிய 'வித்யாபரிணயனம்' கோகுலநாத உபாத்யாயர் எழுதிய அமிருதோதயம் முதலியவை இவ் வகையில் சேர்ந்தவை.

இதே வழியைப் பின்பற்றி திருநெல்வேலி ஜில்லா கடையநல்லூர் கிருஷ்ணபுரம் மிட்டாதார் ஸ்ரீ V.S மணி அய்யர் அவர்கள் ஈசம், கேனம், கடம், பிரச்னம், முண்டகம், மாண்டூக்யம், தைத்திரீயம், ஐதரேயம் என்னும் எட்டு உபநிஷத்துக்களின் கருத்துக்களை நன்கு தெளிவாக எடுத்துக்காட்டி உபநிஷத் நாடகங்களை இயற்றியுள்ளார். இதில் உபநிஷத் கதைகளில் தனது கற்பனைத் திறமையால் பல சுவையான ஸம்பவங்களைச் சேர்த்து மூலக்கதையின் போக்குக்குக்குறைவு வராதபடி அமைத்துள்ளார். ஸம்பாஷணைகளின் மூலம் மந்திரங்களின் பொழிப்புரையுடன் கருத்துரையும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீசங்கரபாஷ்யத்தில் உள்ள ஸ்வாரஸ்யமான கருத்துக்களும் காட்டப்பட்டுள்ளன. இந்த நாடகங்களை வாசிப்பதன் மூலம் உபநிஷத் மந்திரார்த்தங்களை அறிந்து கொள்வதுடன் அத்வைத வேதாந்தக் கருத்துக்களை எளிதில் புரிந்துகொள்ளலாம்.

இந்த நாடகங்களெல்லாம் அகிலபாரத சங்கரஸேவாசமிதியிலிருந்து வெளியிடப்படும் ஸ்ரீ சங்கரக்ருபா மாதப்பத்திரிகையில் தொடர்கட்டுரைகளாக வெளிவந்துள்ளன. அந்தப் பிரதிகள் முழுவதும் இப்பொழுது கிடைக்காததாலும் பல அன்பர்கள் வேண்டிக்கொண்டதாலும் இந்த எட்டு உபநிஷத் நாடகங்களும் ஆறு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளன.

இந்நாடகங்களை எல்லோரும் வாங்கிப்படித்து இதன் மூலம் உபநிஷத் கருத்துக்களை சுலபமாக நன்கு புரிந்துகொண்டு பரமசிரேயஸ்ஸை யடையவேணுமாக பிரார்த்திக்கிறேன்.

**K. V. சுப்பரத்னம்,**
ஆசிரியர் "ஸ்ரீ சங்கர க்ருபா"

உ

ஸ்ரீ குருப்யோ நம:

உபநிஷத் நாடகமாலா-1

# ஈசாவாஸ்ய உபநிஷத்

(நாடகம்)

## நாடக பாத்திரங்கள்

1. வைசம்பாயனர்— மிதிலைக்கருகில் ஆசிரமம் அமைத்துக்கொண்டு சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்யும் மஹரிஷி

2. யாக்ஞவல்க்கியர்—ஷையாரின் பிரதான சிஷ்யர் மருமகனும் கூட

3. போதாயனர்
   த்ரிசங்கு
   வைகானஸர்
   மாஹாசமஸ்யர் } வைசம்பாயனரின் சிஷ்யர்கள்.

4. பாலகன் — ஷையாரின் மருமான் சிறுவன்

5. கண்வர்,
   தத்யங் ஆதர்வணர் } யாக்ஞவல்க்கியரின் சிஷ்யர்கள்

6. ஸுபோதர் — தத்யங் ஆதர்வணரின் குமாரர்

மந்திரிகள், ராஜசேவகர்கள், ரிஷிபத்தினிகள், ஆசிரமவாஸிகள் மற்றும் பலர்.

நிகழுமிடம்:—முதல் அங்கமும் மூன்றாவது அங்கமும் மிதிலாபுரியிலும் பக்கத்திலுள்ள ஆசிரமங்களிலும், இரண்டாம் அங்கம் மஹாமேருவிற்கு பார்சுவ பிரதேசங்களிலும்.

# ஈசாவாஸ்யோபநிஷத்

(நாடகம்)

## முதலாவது அங்கம்

### காட்சி 1

(திரை விலக)

[வைசம்பாயனரின் ஆசிரமம், தர்ப்பாஸனத்தில் மஹரிஷி அமர்ந்திருக்கிறார். சிஷ்யர் யாக்ஞவல்கியர் பக்கத்தில் பயபக்தியோடு நின்று விசிறிக்கொண்டிருக்கிறார்.]

**வைசம்பாயனர்:—** குழந்தாய்! த்ரிசங்கு வந்துவிட்டானா?

**யாக்ஞவல்க்கியர்:—** இல்லை. மாமா!

**வைசம்பாயனர்:—** நேற்றே வந்திருக்கவேண்டுமே! இன்னும் வராததால் எனக்குக் கொஞ்சம் கவலையாகத்தான் இருக்கிறது.

**யாக்ஞவல்க்கியர்:—** ஸ்வாமீ! மஹா மேருவிற்குப் போய்விட்டு வரவேண்டாமா? வழியில் ஸரஸ்வதி நதிக்கரையிலிருக்கும் ஆசிரமங்களில் தங்கிவரலாமல்லவா!

**வைசம்பாயனர்:—** வத்ஸா! நீ சொல்வது சரிதான். வழியில் அவன் சொந்த ஊர் இருக்கிறது. தாய்நாட்டுப் பாசம் விடுமா? அவனைப் போகச்சொல்லாமல் வேறு ஒருவனை அனுப்பியிருக்கவேண்டும். மஹா மேருவில் நடந்த விருத்தாந்தங்களை அறிய ஆவல் உண்டாகிறது. காலை முதல் என் இடக்கண்ணும் இடது தோளும் துடிக்கின்றன. ஏதோ நிகழப்போகும் கெட்ட காரியங்களுக்கு அறிகுறிகள் தென்பட்டவண்ணமிருக்கின்றன.

(த்ரிசங்கு பிரவேசிக்கிறார்)

**வைசம்பாயனர்:**— வா! குழந்தாய்! (நமஸ்கரித்த சிஷ்யர் த்ரிசங்குவை அன்போடு அணைத்து அருகில் அமர்த்திக்கொள்ளுகிறார்) என்மனம் அலைபாய்கிறது. மஹாமேருவில் நடந்த நிகழ்ச்சிகளை உடன் கூறுவாய்.

**த்ரிசங்கு:**— வஸிஷ்டர் முதலிய ஸப்தரிஷிகளும் வந்திருந்தார்கள். ஜனகமகாராஜாவின் குலகுரு ஸதானந்தரும் வந்திருந்தார். வேதவியாஸர் தலைமையில் மஹரிஷிகளின் மஹாசபை கூடியது. விசுவாமித்ர மகரிஷியும் தேவலருமாகச் சேர்ந்து வருகை தராதவர்கள் யார் யார் என்று கவனித்தனர்.

**வைசம்பாயனர்:**— யார் யார் வரவில்லை?

**த்ரிசங்கு:**— குருநாதரே, தங்களைத் தவிர எல்லோரும் வந்திருந்தார்கள்.

**வைசம்பாயனர்:**— பின் என்ன நடந்தது?

**த்ரிசங்கு:**— வராதவர் பெயர் தலைவரிடம் கூறப்பட்டது. தலைவர் வேதவியாஸரும் ஸபையில் என்ன செய்ய வேண்டும் என்று அபிப்ராயம் கேட்டார்கள். அப்பொழுது நான் அருகில் சென்று வணக்கமாக குருநாதர் வரமுடியாமல் போனதற்குள்ள காரணங்களை விளக்கமாக தெரிவித்தேன். அப்போது துர்வாஸர் எழுந்து பலமாக ஆக்ஷேபித்து, "மிதிலையிலிருந்து ஸதானந்தர் வந்திருக்கிறார். பக்கத்து ஆச்ரமத்திலிருக்கும் வைசம்பாயனர் வராமலிருந்தது குற்றமே" என்று வாதித்தார். தலைவர் எவ்வளவோ நயமாகப் பேசியும் ஸபை அங்கீகரிக்கவில்லை. ஏகமனதாகச் சாபம்கொடுத்துவிட்டது.

**வைசம்பாயனர்:**— அவர்களைச் சொல்லக்குற்றமில்லை. சாபத்தையும் முன்கூட்டியே தெரிவித்திருந்தார்களே. ஏதோ கெட்டகாலம் எனக்குப் போகமுடியாமல் போய்விட்டது. அது இருக்கட்டும் த்ரிசங்கு! என் நண்பர் வசிஷ்டர் ஒன்றும் சொல்லவில்லையா?

**த்ரிசங்கு:**— அவரும் தங்கள் சார்பில் வாதாடினர். ஆனல் விசுவாமித்திரர் எழுந்து எதிர்வழக்காடினர். உடன் தலைவர் குறுக்கிட்டு ஸமாதானப்படுத்தினர்,

**வைசம்பாயனர்:**— கடைசியில் ஏதாவது சாப விமோசனம் விதித்தார்களா ?

**த்ரிசங்கு:**— ஆமாம் சாந்திராயண விரதங்களை அனுஷ்டித்து சாபத்தைப் போக்கிக்கொள்ளலாம் என்று விதித்தார்கள்.

**வைசம்பாயனர்:**— குழந்தைகளே ! சாபமோ மிகக் கொடிது. இன்னும் ஏழு நாட்களுக்குள் பிரம்மஹத்தி தோஷம் என்னைப் பிடிக்கும், எனக்கு வயது அதிக மாகிவிட்டது. இந்த வயோதிக நிலையில் என்னல் எப்படி இந்தக் கடினமான விரதங்களை அனுஷ்டிக்க முடியும் ? விமோசனமில்லாமல் சாபத்தை அனுபவிக்கவேண்டியதுதான்.

**த்ரிசங்கு:**— ஸ்வாமீ ! கவலைவேண்டாம். அதற்கும் தங்கள் நண்பரான வசிஷ்டபகவான் ஒரு உபாயம் சொல்லி அனுப்பியிருக்கிறார்.

**வைசம்பாயனர்:**— அது தென்ன ? உடன் கூறுவாய்!

**த்ரிசங்கு:**— குருநாதரே, வயோதிகத்தினல் தங்களுக்குச் சக்தியில்லாத பக்ஷத்தில் தங்களுக்குப்பதிலாக மற்றவர்களைச் சாந்திராயண விரதங்களை அனுஷ்டிக்கச்செய்தால் சாபம் விலகிவிடும் என்று வழி வகுத்தார்கள்.

**யாக்ஞவல்க்கியர்:**— ஸ்வாமீ ! வசிஷ்டரின் மகிமையே மகிமை! எந்த தர்மசங்கடத்திற்கும் நியாயமான நிவர்த்தி நியமித்தருளும் நிர்மலரல்லவா அவர் !

**வைசம்பாயனர்:**—அதுமட்டுமா குழந்தாய் ! என்னிடம் அவருக்குள்ள அன்பும் அபிமானமும் அளவிடற்

கரியது. சபையில் அவர் இருக்கும்வரை எனக்கு விரோதமாக ஒன்றும் நடவாது என்று நம்பித்தான் நானே போகவில்லை. ஆனால் விதிவசம் விசுவாமித்திரரும் துர்வாசரும் எதிர்க்கவே அவரால் ஒன்றும் செய்ய இயலவில்லை.

யாக்ஞவல்க்கியர்:— குருநாதரே! அவ்விருவரும் ஏன் எதிர்க்கவேண்டும்? தங்களுக்கு வேண்டாதவர்களா என்ன?

வைசம்பாயனர்:—அவர்களிருவரும் எனக்குத் தெரிந்தவர்களே! ஆனால் வசிஷ்டர் எனது ஆருயிர் நண்பர். விசுவாமித்திரருக்கு வசிஷ்டர் என்ன சொன்னாலும் அதை எதிர்ப்பது தான் வழக்கமாயிற்றே! துர்வாஸர் முன்கோபி. அதிகக் கண்டிப்பும் கட்டுப்பாடும் உடையவர். ஆகையால் அவர் செய்ததிலும் தவறு ஒன்றுமில்லை. எல்லாம் என் வினைப்பயன்.

யாக்ஞவல்க்கியரும் த்ரிசங்குவும்:— சேர்ந்து) ஐயனே! வருத்தம் வேண்டாம். நாங்கள் வேண்டியபடி விரதங்களை அனுஷ்டித்து சாபக்கேட்டை நீக்குகிறோம். உத்தரவுகொடுங்கள்.

வைசம்பாயனர்:— குழந்தைகளே! அதைப் பின்னால் கவனிப்போம். இன்று அரண்மனைக்கு யார் போக வேண்டும்?

யாக்ஞவல்க்கியர்:— மாமா! போதாயனர் போக வேண்டும்.

வைசம்பாயனர்:— அவன் இன்னும் வரவில்லையே! காலையிலேயே உன் மாமி அவனை கோமதீதீரத்துக்கு அனுப்பினாள். ஆகையினால் நீ போய் வா யாக்ஞவல்க்கியா!

யாக்ஞவல்க்கியர்:— உத்தரவுப்படி செய்கிறேன்.

வைசம்பாயனர்:— குழந்தாய்! அக்னிஹோத்ர சாலையிலிருந்து பிரஸாதங்களை எடுத்துக்கொண்டு

உடன் போய் வா ! பிரஸாதங்களை மகாராஜாவுக்குக் கொடுத்துவிட்டு வந்துவிடு. மந்திராக்ஷதை மறவாமல் எடுத்துச்செல்வாயாக.

**யாக்ஞவல்க்கியர்:**— மாமா, போய்வருகிறேன். (வணங்குகிறார்)

**வைசம்பாயனர்:**— வத்ஸா ! ஞாபகமாக எல்லா பிரஸாதங்களையும் எடுத்துக்கொள் ! அபிஷேகதீர்த்தம் விபூதி மந்திராக்ஷதை மறந்துவிடாதே. பாலகன் அரண்மனையைப் பார்க்கவேண்டுமென்று சொன்னான் அவனையும் கூட அழைத்துப்போ.

**யாக்ஞவல்க்கியர்:**— ஸ்வாமீ ! ஆகட்டும் ! போய் வருகிறேன். (போகிறார்)

**த்ரிசங்கு:**— ஐயனே ! அடியேன் என்ன செய்ய வேண்டும் கட்டளையிடுங்கள்.

**வைசம்பாயனர்:**— (யோசித்து) வத்ஸா, யாஜ்ஞவல்க்கியன் போய்விட்டானா பார் ! அவன் அரண்மனைக்குப் போனால் அனர்த்தம் ஒன்றும் வரலாகாது. இன்றுவரை அவனை அனுப்பாமல் தான் இருந்தேன் ! அவன் அவசர புத்திக்காரன்.

**த்ரிசங்கு:**— (வெளியில் போய்வந்து) அவர் போய் விட்டார் ஸ்வாமி ! பின்னால் பாலகனும் போகிறான். கூப்பிடவா ?

**வைசம்பாயனர்:**—வேண்டாம் போகட்டும். வருவது வந்தே தீரும். விதியை வெல்ல யாரால் முடியும் ? மாத்தியாந்ஹிக ஸ்னானத்துக்குப்போவோம். வா என் கையைப் பிடித்துக்கொள். (சீடன் கரத்தைப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்கிறார்)

(திரை விழுகிறது)

## காட்சி 2

(திரை விலக)

[மிதிலாபுரியில் ஜனகமஹாராஜாவின் அரண்மனையில் கொலு மண்டபம், மத்தியில் ஸ்வர்ண சிம்மாஸனம் போடப்பட்டிருக்கிறது. இருமருங்கிலும் உயர்ந்த ஆஸனங்களில் மந்திரிபிரதானிகள் வீற்றிருக்கின்றனர். ஸேவகர்கள் ஆயுதங்கள் தரித்து காவல் புரிகின்றனர். யாஜ்ஞவல்க்கியரும் பாலகனும் பிரவேசிக்கின்றனர்.]

**யாக்ஞவல்க்கியர்:—** தம்பீ பாலகா, எல்லாம் பார்த்தாயா! அரண்மனையில் அரசச்செல்வங்கள், கண்ணைக் கவரும் பட்டாடைகள், களிநடம் புரியும் கவலையில்லாத மனிதர்கள், உலகமே நாடகமேடை என்ற உண்மையை உள்ளங்கை நெல்லிக்கனியாகக் காட்டுகிறதல்லவா!

**பாலகன்:—** அண்ணா! தாங்கள் சொல்வது சரிதான். ஆனால் எனக்கு இந்த ஆடம்பரம் கட்டோடு பிடிக்கவில்லை.

**யாக்ஞவல்க்கியர்:—** பின் எதற்காக இங்கே வர வேண்டுமென்று மாமாவிடம் கூறினாய்? இதோ ராஜ சபைக்கு வந்துவிட்டோம். எல்லாம் சுற்றிப்பார்ப்போம்.

**பாலகன்:—** அண்ணா, நான் நினைத்தேன் விதேஹ மஹாராஜர் வாழுமிடம் வேறுவிதமாக இருக்குமென்று! ஆனால் மற்ற அரண்மனைகளைப்போலவே இங்கும் காண்கிறேன். ஒரு பிரம்மஞானி அரசு புரியும் இடமாகத் தெரியவில்லையே இது! ராஜ ஸபையில் ஏன் ஆயுதம் தாங்கிய படர்கள் நிற்கவேண்டும்?

**யாக்ஞவல்க்கியர்:—** குழந்தாய், நீ சொல்வது சரியல்ல நாய் வேஷம் போட்டால் குரைக்கத்தான்வேண்டும். அரசராயிருக்கும் வரை அந்த வாழ்வுக்குரிய தருமங்களைக் கடைப்பிடிக்கத்தானே வேண்டும்! ஸபையில் ராஜாவைக்காணவில்லையே!

(மந்திரியிடம் சென்று வினவுகிறார்.)

நான் மஹரிஷி வைசம்பாயனரின் பிரதம சிஷ்யர். மஹாராஜாவிற்காக மங்களாக்ஷதையும் பிரஸாதங்களும் கொண்டு வந்திருக்கிறேன். பிரஸாதங்களைக் கொடுக்க வேண்டும். மகாராஜா எங்கே?

**பாலகன்:—** தாங்கள் யார்? அரசர் எப்போது வருவார்?

**மந்திரி:—** வாருங்கள். இப்படி அமருங்கள்; நான் இந்த ராஜ்யத்தின் முதன் மந்திரி. மகாராஜா அவர்கள் தியானத்தில் இருக்கிறார்கள். ஸமாதி கலைந்த பின்னர் தான் ஸபை கூடும்.

**யாக்ஞவல்க்கியர்:—** எங்களுக்கு அதுவரையில் காத்திருக்க முடியாதே. உடன் திரும்பவேண்டுமென்பது குருவின் ஆணை. ஆனால் இங்கு காலதாமதம் ஏற்படுகிறது. என்ன செய்வது?

**மந்திரி:—** ஸ்வாமி! நேற்று பிரஸாதம் கொண்டு வந்த சிஷ்யர் அரசரைக்கண்டு மந்திராக்ஷதை கொடுத்துவிட்டுத்தான் போனார்.

**பிரதானி:—** அரண்மனையில் விருந்தும் உண்டபின் தான் சென்றார்.

**பாலகன்:—** இன்று வந்தவர்கள் வேறு, நேற்று வந்தவர் வேறு. எங்களுக்கு உடனே போகவேண்டும்.

**மந்திரி:—** அப்படியானால் பிரஸாதங்களை நாங்கள் வாங்கிக்கொள்ளுகிறோம். கொடுத்துவிட்டு—

**யாக்ஞவல்க்கியர்:—** மந்திரி அவர்களே! நாங்கள் மகரிஷியின் மந்திராக்ஷதையை மகாராஜாவின் கையில் தான் கொடுப்போம். இல்லாவிடில்- (யோசித்து, தம்பியை அருகில் அழைத்து காதோடு பேசி) இப்படிச் செய்தால் என்ன?

**பாலகன்:**—அண்ணு, அதுதான் நல்லது. அப்படியே செய்வோம்!

**யாக்ஞவல்க்கியர்:**— ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சிஷ்யன் மகாராஜாவிற்கு மந்திராக்ஷதை கொண்டு போய்க் கொடுத்துவரவேண்டுமென்ற ஏற்பாட்டின் படி நான் இன்று வந்தேன். உங்கள் அரசரைப் பார்க்க முடியவில்லை. எங்களுக்கு அவசரமாக திரும்பிப் போக வேண்டும். பிரஸாதங்களை ஸிம்மாஸனத்தில் வைத்து விட்டுப்போகிறேன்.

**பிரதானி:**— ஸ்வாமீ! தங்கள் அபிப்பிராயப்படி செய்யலாம். ஆனல்—

**பாலகன்:**— ஆனல் என்ன?

**மந்திரி:**—இது தெய்வீகமான ஸிம்மாஸனம். ஜனக மகாராஜாவின் பரம்பரையைச் சேர்ந்தவர் தவிர வேறு ஒருவரும் ஏறலாகாது.

**யாக்ஞவல்க்கியர்:**—நீங்கள் ஏறச்சொன்னலும் நான் ஏறமாட்டேன். ஸ்வர்ணத்தைத் தொடுவது பாபம். நான் தீண்டமாட்டேன். தம்பீ பாலகா, இந்த பிரஸாதங்களை ஸிம்மாஸனத்தில் வைத்து விட்டுவா. போவோம்.

(பாலகன் கைகளில் வாங்கிக்கொண்டு ஸிம்மாஸனத்தின் பக்கத்தில் போகிருன். அப்போது அசரீரி கேட்கிறது—'ஜனகமகாராஜாவின் ஸிம்மாஸனத்தை உத்தரவில்லாமல் தொடுபவர்கள் ஏழு நாட்களுக்குள் இறந்து போவார்கள்' என்று. இதைக்கேட்டு சபையோர்கள் கலங்கித் தவிக்கின்றனர். மந்திரி பாலகனைப் போகக்கூடாதென்று தடுக்கிருர். யாக்ஞவல்க்கியர் மௌனமாக நிற்கிருர்)

**பாலகன்:**— ஆறிலும் சாவு நூறிலும் சாவு. மரணத்திற்குப் பயந்து முன்வைத்தகாலைப் பின்வைக்கமாட்டேன். அண்ணு, மரணம் இந்த உடம்புக்குத்தானே! ஆத்மாவுக்கு அழிவேது? (பிரஸாதங்களை ஸிம்மாஸனத்தில் வைத்துவிட்டு இறங்குகிருன்)

**யாக்ஞவல்க்கியர்:—** தம்பீ! ஏதோ பயங்கரமான எதிர்கால நிகழ்ச்சி நம்மை எதிர் நோக்கி வந்துகொண்டிருக்கிறது.

**பாலகன்:—** அண்ணு, இந்த அசரீரி உளறிய வாக்கை தாங்கள் நம்பிவிட்டீர்களா?

**யாக்ஞவல்க்கியர்:—** தம்பி, எனக்கு இனம் தெரியாத இயம்ப இயலாத இடுக்கண் வரும்போல் தோன்றுகிறது. மலை உச்சியிலிருந்து கீழே அதல பாதாளத்துக்குத் தள்ளப்படுவதுபோல், விதி நம்மை இழுத்துச்செல்கிறது.

**பாலகன்:—** அண்ணு, தாங்கள் இந்த அற்பவிஷயத்துக்கு இப்படி திடுக்கிடலாமா? இவ்வளவு நாட்களாக மாமாவிடம் படித்த வேதாந்தபாடங்கள் என்ன பயனைக் கண்டன?

**யாக்ஞவல்க்கியர்:—** குழந்தாய், இளங்கன்று பயம் அறியாது என்பார்கள். விளையப்போவது விதியின் விளையாட்டு. நம்மால் ஒன்றும் செய்யமுடியாது. உடனே போய் குருநாதரிடம் நடந்தவைகளைக் கூறுவோம். அவரது திருவடியே நமக்குப் பாதுகாப்பு. (தனக்குள்) இங்கு பாலகனுக்கு மரணம் நேரும்படி சாபம். அங்கு குருநாதருக்கு பிரம்மஹத்தி தோஷம் உண்டாக சாபம். என்ன நடக்குமோ? யாருக்குத்தெரியும்? ஒரே அந்தகாரம். குருவே ஒளி தந்து வழிகாட்டவேண்டும். நான் கொஞ்சம் அவசரப்படாமல்-நிதானமாக நடந்துகொண்டிருந்தால் இப்படி நேர்ந்திராதல்லவா! எப்படியாவது பாலகனைக் காப்பாற்றியாகவேண்டும்! ஐயனே, நீரே சரண் (வெளியே) குழந்தாய், போவோம். வேகமாய்ச் சென்று மாமாவிடம் நிகழ்ச்சிகளை உரைப்போம்.

**பாலகன்:—** அண்ணு! அப்படியே போவோம்.

(போகிறார்கள்)

(திரை விழுகிறது.)

## காட்சி 3

(திரை விலக)

[வைசம்பாயனர் ஆசிரமம். மஹரிஷியும் மற்ற சிஷ்யர்களும் உட்கார்ந்து உரையாடிக்கொண்டிருக்கின்றனர்]

**வைசம்பாயனர்:**— வத்ஸர்களே! யாக்ஞவல்க்கியன் போய்வந்த சமாசாரங்களைக் கேட்டதுமுதல் என் மனம் மிகுந்த வேதனைப்படுகின்றது. பாலகனை அவன் தாயார் என்னிடம் ஒப்புவிக்கும்போது கவனமாக காப்பாற்றி வளர்ப்பதாக வாக்குக் கொடுத்திருந்தேன். ஆனல் இன்னும் நான்கைந்து நாட்களில் யமன் வாயில் ஒப்பு விக்கப்போகிறேன். அந்தோ விதியே!

**மாஹாசமஸ்யர்:**—குருநாதரே! தாங்கள் இப்படி மனதிடம் இழக்கலாகாது. மனதைத் தேற்றிக்கொள் ளுங்கள்.

**போதாயனர்:**— ஸ்வாமி! "ஸ்மாரயே த்வாம் ந சிக்ஷயே" தங்களுக்குத்தெரியாத விஷயம் ஒன்றும் இல்லை. ஞாபகப் படுத்துகிறேன். ஆத்மாவுக்கு அழி வில்லை. ஜீர்ணமான வஸ்திரங்களைக் களைந்துவிட்டு மனிதன் புதுப்புது ஆடைகளை அணிவதுபோல், ஆத்மா வும் பழைய சரீரங்களை உதறிவிட்டு வேறு புது உடம்பு களைப்பெறுகிறது. இப்படி பாம்பு சட்டையை உரிப்பது போல் சரீரங்கள் விடப்படுகின்றன என்று நேற்றுக் கூட உபதேசித்தீர்களே ஸ்வாமி! கலக்கம் வேண்டாம். தைரியமாயிருங்கள்.

**வைசம்பாயனர்:**— எல்லாம் இந்த யாக்ஞவல்க்கிய னல் தானே வந்தது. அவன் ஒரு அடங்காப்பிடாரி. அவனை அரண்மனைக்கு அனுப்பியிராவிட்டால் இது ஒன்றும் நேர்ந்திராது அல்லவா?

[யாக்ஞவல்க்கியர் வருகிறார். குருவை வணங்குகிறார்' பக்கத்தில் நிற்கிறார். வைசம்பாயனர் உட்கார் என்றுகூடச் சொல்லவில்லை.]

திரிசங்கு:— குருநாதரே! நாம் இப்படி வருத்தப்படு கிறோமேதவிர பாலகன் பயப்படவேயில்லை. பட்டாபி ஷேகத்துக்கு அழைக்கப்பட்டிருக்கும் அரசகுமாரனைப் போல் கம்பீரமாக உலவுகிறான்.

மாஹாசமஸ்யர்:— அதுமட்டுமா? எல்லாரிடமும் இந்த விருத்தாந்தத்தைக் கூறி விடைபெற்று வருகிறான்.

போதாயனர்:— அடுத்த ஊருக்குப் போகும் வித்தி யார்த்தியைப்போல் துள்ளிக்குதித்து ஓடிக்கொண்டிருக் கிறான்.

யாக்ஞவல்க்கியர்:—என் தம்பி உங்களைப் போல் தொடைநடுங்கியல்ல. பயமென்பதே அறியாதவன். ஆத் மஞானிக்கு அச்சமுண்டோ?

வைசம்பாயனர்:—அடே யாக்ஞவல்க்கியா! போதும் நிறுத்து உன் அதிகப்பிரசங்கத்தை. இங்கே யார் உன்னை அழைத்தார்கள்?

யாக்ஞவல்க்கியர்:— மாமாவின் மருங்கில்வர மருமக னுக்கு எப்போதும் உரிமையுண்டு.

வைசம்பாயனர்:— அடே பிராஹ்மண பந்துவே! உனக்கும் எனக்கும் உறவு நேற்றோடு முடிந்துவிட்டது. என் அருமை மருமகன் பாலகனைப் படுகுழியில் தள்ளி விட்டாயே, அந்த நேரத்திலேயே பந்துத்வம் போய் விட்டதடா!

(பாலகன் பிரவேசிக்கிறான். யாக்ஞவல்க்கியரும் ஏதோ கோப மாகப் பேச எத்தனிக்கிறார். ஆனால் பாலகன் தடுக்கவே நிறுத்திக் கொள்ளுகிறார்)

திரிசங்கு:—குருநாதரே! ஸாயங்கால அக்னிஹோத் திரத்திற்கு நேரமாகிவிட்டது. உள்ளே போவோமா!

வைசம்பாயனர்:—அப்படியே செய்வோம். வாருங்கள் உள்ளே போவோம்.

(எழுந்திருக்கிறார், அப்போது அரண்மனையிலிருந்து ராஜசேவகன் வந்து வணக்கம் செய்து தெரிவிக்கிறான் குருநாதர் உட்காருகிறார்.)

**ராஜசேவகன்:**—பகவானே, மகரிஷியே! நமஸ்காரம் நேற்று ஸிம்மாஸனத்தில் தங்கள் சிஷ்யர் வைத்துவிட்டுப்போன மந்திராக்ஷதை முளைத்து விதானமாக வளர்ந்திருக்கிறது. அரசர் பார்த்து அதிசயப்பட்டார். அந்த சிஷ்யரை உடனே கையோடு அழைத்துவர என்னை அனுப்பியிருக்கிறார். தயவு செய்து ஸ்வாமி, அவரை என்னுடன் அனுப்பவேண்டும்.

**வைசம்பாயனர்:**—ராஜசேவகனே! (யாக்ஞவல்க்கியரைச்சுட்டிக்காட்டி) அவன் அதோ நிற்கிறான். வந்தால் அழைத்துப்போகலாம்.

**ராஜசேவகன்:**—(யாக்ஞவல்க்கியர் அருகில் சென்று வணங்கி) ஸ்வாமி வணக்கம். அரண்மனை எங்கும் தங்களைப்பார்க்க ஜனங்கள் ஆவலுடன் கூடியிருக்கிறார்கள். தங்களைக் கையோடு அழைத்துவர அரசர் ஆணையிட்டிருப்பதுடன் ரதமும் அனுப்பியிருக்கிறார். தயவுசெய்யவேண்டும்.

**யாக்ஞவல்க்கியர்:**— ராஜபடனே! நீ போய் உன் அரசனிடம் கூறுவாய், என்னால் வரமுடியாதென்று. நான் என் குருநாதருக்கு அடிமையே தவிர அரசனுக்குக்கீழ்ப்பட்டவனல்ல. இப்போது என்னால் அரண்மனைக்கு வரமுடியாது. வேண்டுமானால் அரசர் இங்கே வரட்டுமே.

**பாலகன்:**—அண்ணா! இந்தச் சூழ்நிலையில் அரசன் இங்கு வந்தாலும் பார்க்கமுடியாது. ராஜசேவகனே! நீ வெறும்கையுடன் திரும்பிச்செல்ல நேர்ந்ததுபற்றி வருத்தமே.

[ராஜசேவகன் எல்லோரையும் வணங்கிவிட்டுப்போகிறான்.]

**வைசம்பாயனர்:—** அடே யாக்ஞவல்க்கியா ? நாம் எல்லோரும் ஜனகமகாராஜாவின் பிரஜைகள். அரசன் ஆணைக்குக் கீழ்ப்படியவேண்டியது நம் கடமை. முக்கியமாய் பிராமணர்களையும் அவர்கள் தர்மத்தையும் காப்பவன் அரசனேயாகும். அவனது சேவகனை அவமதித்ததும் அரசனை அவமதித்ததுபோல் குற்றமேயாகும்.

**யாக்ஞவல்க்கியர்:—** குருநாதரே! நான் போகவேண்டுமென்பது தங்கள் விருப்பமானால் உத்தரவுகொடுத்திருந்தால் உடனே போயிருப்பேனே !

**வைசம்பாயனர்:—** உன்னை சிஷ்யன் என்று கூறிக்கொள்ளவே நான் வெட்கப்படுகிறேன்.

**யாக்ஞவல்க்கியர்:—** ஐயனே! அடியேன் அறிந்து யாதொரு தவறுதலும் செய்யவில்லை அறியாமல் செய்திருக்கும் பிழைகளைப் பொறுத்தருள வேண்டுகிறேன். (ஸாஷ்டாங்கமாக விழுந்து வணங்குகிறான்)

**வைசம்பாயனர்:—** (கோபம் கொதித்து எழ) அடே என் முன் நில்லாதே ! போய்விடு. முதலில் என் சிஷ்யர்களை அவமதித்தாய். பின் அரசனை அவமதித்தாய். என் கோபத்தைக் கிளப்பாதே. என் கோபாக்கினிக்கு ஆஜ்யமாக என் முன் நில்லாதே. உடன் போய்விடு.

**பாலகன்:—** (அருகில் சென்று வணங்கி) மாமா, கோபித்துக்கொள்ளாதீர்கள். தங்களுக்கு உற்றபந்துவும் பிரதம சிடனுமான அண்ணன் எங்குபோவான்? அவனை மன்னித்து ஏற்றுக்கொள்ளுங்கள். உங்கள் காலில் விழுந்து கெஞ்சுகிறேன். (ஸாஷ்டாங்கமாக விழுந்து காலைப்பிடித்துக் கொள்ளுகிறான்) மன்னித்தேன் என்று கூறினால் ஒழிய காலை விடமாட்டேன்.

**வைசம்பாயனர்:—** விடு விடு காலை! எனக்கு அக்னிஹோத்ரசாலைக்குப் போகவேண்டும்.

[காலை உதறிக்கொண்டு எழுந்திருக்கிறார். அதைத்தாங்காத பாலகன் "ம்ருத்யோர்மா அம்ருதம் கமய" என்று கூறிக்கொண்டு அமரனாகிறான். யாக்ஞவல்க்கியர் கையில் எடுத்துக்கொண்டு உள்ளே போகிறார். ஆசிரமத்திற்குள்ளே ரிஷிபத்தினிகள் ஆசிரமவாஸிகளின் அழுகுரல் கேட்கிறது. வைசம்பாயன மஹரிஷியையும் அந்தக்ஷணமே பிரம்மஹத்தி பிடித்துக்கொள்கிறது. பயங்கரமான கருத்த உருவமும் சிவந்த சடைகளும் நெருப்புப்போன்ற கண்களுமுடைய ஒரு கோரஸ்வரூபமாக மாறுகிறார் மஹரிஷி ]

**வைசம்பாயனர்:—** அந்தோ! இது என்ன கோரமான ரூபம். சரி, பாலகன் சாபத்தினால் இறந்துவிட்டான். நான் அதற்குக் காரணமானேன். சாபத்தால் என்னையும் பிரம்மஹத்தி பிடித்துக்கொண்டது. எல்லாவற்றிற்கும் இந்த அதமன் யாக்ஞவல்க்கியனே காரணம்.

[உள்ளேயிருந்து அவர் பத்தினி வந்து உருவத்தைப்பார்த்துவிட்டு இவர் என் கணவரல்ல என்று கூறிக்கொண்டே பயந்து ஓடுகிறாள். மற்ற சிஷ்யர்களும் அதிக பயமடைந்து அருகில் வராமல் ஒதுங்கி நிற்கிறார்கள். த்ரிசங்கு இரண்டும் கெட்ட நிலையில் தயங்கி நிற்கிறான் யாக்ஞவல்க்கியர் மட்டும் தைரியமாக, குருவின் பக்கத்தில் சென்று வேண்டிய சுச்ருஷை செய்கிறார்.]

**வைசம்பாயனர்:—** ஹா! ஹா!! தேஹமெல்லாம் ஒரே கொதிப்பாக கொதிக்கிறதே. ஐயோ அப்பா! அனல்போல் காய்கிறது. தாகம், தாகம் மரண தாகமா தண்ணீர் கொடுங்கள்.

(யாக்ஞவல்க்கியர் விசிறியால் வீசுகிறார். குளிர்ந்த தண்ணீர் கொண்டுவந்து கொடுத்து உதவுகிறார். சிறிதும் அருவருப்பின்றி சந்தோஷமாகப் பக்கத்தில் நின்று பணிவிடை செய்கிறார். அதைப் பார்த்து தைரியங்கொண்டு மற்ற சிஷ்யர்களும் ஆசிரமவாஸிகளும் பயம் நீங்கி அருகில் வருகிறார்கள்.)

(திரை விழுகிறது)

## காட்சி 4

(திரை விலக)

[வைசம்பாயனரின் ஆசிரமம். சிஷ்யர்கள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கின்றனர்.]

**வைகானஸர்:**— போதாயனரே! கேட்டீரா அதிசயத்தை?

**போதாயனர்:**—என்ன அதிசயம்? விபரமாகக் கூறும்.

**மாஹாசம்ஸியர்:**—நம் ஆசிரமத்தில்தான் ஒருநாளு மில்லாத திருநாளாய் அற்புதங்கள் நிகழ்கின்றனவே. அதைத்தான் சொல்லுவார்.

**வைகானஸர்:**— நண்பரே, நீர் சொல்லுவதும் ஒரு விதத்தில் சரிதான். முக்கியமான சிஷ்ய தர்மங்கள் அறிந்தவரும், கல்வியில் சிறந்த மேதாவியும் குருவுக்குப் பணிவிடை செய்வதில் அக்ரகண்யருமாகிய யாக்ஞவல்க் கியருக்கும் மஹரிஷி வைசம்பாயனருக்கும் ஏற்பட்டிருக் கும் பூசலைத் தவிர வேறு அதிசயமுமுண்டோ? ஆனால் நான் இப்போது அதைக்குறிப்பிடவில்லை.

**போதாயனர்:**—பின் எதைக் குறிப்பிடுகிறீர்? சுற்றி வளைக்காமல் சொல்லலாமே.

**வைகானஸர்:**—நேற்று பாலகனின் அந்திமக்கிரியை கள் நடந்து முடிந்தவுடன், அவன் திவ்ய சரீரம் பெற்று, ஸ்வர்க்கலோகத்திலிருந்து வந்த விமானத்தில் ஏறிச் சென்றானும். தேவர்கள் புஷ்பமாரி வர்ஷிக்க, தேவ துந்துபி முழங்க இந்த அற்புதம் நிகழ்ந்தது.

**மாஹாசம்ஸியர்:**— அப்படியா! நல்ல சேதி தான். 'சிறுவயதில் இறப்பவர்களை தேவர்கள் விரும்புகிறார்கள்' என்றொருபழமொழி கேட்டிருக்கிறேன். அது பாலகன் விஷயத்தில் நிஜமாயிற்று.

**வைகானஸர்:—** நம் குருநாதர் மிகவும் கஷ்டப் படுகிறார்கள். கூடிய சீக்கிரம் நாம் எல்லோரும் விரதங் களை அனுஷ்டித்து, அவர் துன்பத்தை நீக்கவேண்டும்.

**மாஹாசமஸ்யர்:—** நம் கடமை அதுதானே! ஆனால் குரு ஆக்ஞையிடாமல், அனுமதி அளிக்காமல், விரதங் களை ஆசரிக்க முடியாதே!

**போதாயனர்:—** நாமே குருநாதரிடம் சென்று அனு மதிகேட்கவேண்டும். காலவிளம்பம் கூடாது.

**வைகானஸர்:—** நண்பர்களே, குருநாதர் அவர்களே இதோ வருகிறார்கள்.

(மகரிஷி வைசம்பாயனர் மெதுவாக நடந்து வருகிறார். இரு மருங்கிலும் த்ரிசங்குவும் யாக்ஞவல்க்கியரும் நின்று கொண்டு தாங்கி வருகின்றனர்.)

**த்ரிசங்கு:—** ஸ்வாமி, மெதுவாக வாருங்கள்.

**போதாயனர்:—** (தனக்குள்) நல்ல மரத்திலும் புல்லு ருவி பாய்ந்துவிட்டதே? எல்லாம் சரியாக வேண்டும்.

**யாக்ஞவல்க்கியர்:—** குருநாதரே, இந்த ஆஸனத்தில் அமருங்கள்.

**வைசம்பாயனர்:—** அந்தோ விதியே! என்ன கர்மம் இது! சிஷ்யர்களே, இந்த சங்கடத்தை உடன் நீக்கி யாகவேண்டும். அதற்கு உங்கள் எல்லோருடைய உதவி யும் வேண்டும்.

**சிஷ்யர்கள்:—** உத்தரவு கொடுங்கள் ஐயனே! சிர மேற்கொண்டு உடன் செய்கிறோம்.

**வைசம்பாயனர்:—** என் அத்யந்தப் பிரியமான சீடர் களே, உங்கள் மறுமொழி கேட்டு மிகவும் மகிழ்ச்சி. இப்போதே பாதி ஸ்வஸ்தமடைந்தது போன்ற ஸௌக் யம் ஏற்பட்டுவிட்டது.

**வைகானஸர்:**—சீக்கிரம் ஆணையிடுங்கள் குருநாதரே.

**வைசம்பாயனர்:**— என் பிரியமான சீடர்களே! கவனமாய்க் கேளுங்கள். எனக்குவந்திருக்கும் பிரம்மஹத்தி தோஷம் நீங்குவதற்கு ஒரே வழிதான் உண்டு. அது தான் என் ஆருயிர் நண்பர் வஸிஷ்டர் சொல்லியனுப்பியது. எனக்காக நீங்கள் விரதமிருந்து இந்தத் தோஷத்தை நீக்கவேண்டும். வேறொன்றையும் நினையாமல்—புத்தியைச் சலனமடைய விடாமல்—வெகு ஜாக்கிரதையாக இருந்து விரதங்களை அனுஷ்டியுங்கள்.

**போதாயனர் முதலிய சீடர்கள்:**— அப்படியே ஆகட்டும் ஐயனே. தங்கள் கட்டளைப்படி இன்றே தொடங்குகிறோம். ஆசீர்வதியுங்கள்.

**யாக்ஞவல்க்கியர்:**—ஸ்வாமீ. இந்த அல்ப தேஜஸ் உள்ள பிராம்மணர்களை ஏன் வருத்தவேண்டும்? அடியேன் ஒருவனே அந்த விரதத்தைச் செய்கிறேன்.

**வைகானஸர்:**— நண்பரே. அகந்தை வேண்டாம். நாங்களும் உம்மைப்போல் மஹரிஷியின் சீடர்களே. அவர்களுடைய நோயை நீக்குவதில் உமக்குக் குறையாத அக்கரை எங்களுக்குமுண்டு அத்தொண்டில் எங்களுக்கும் பங்கு உண்டு.

**போதாயனர்:**—யாக்ஞவல்க்கியருக்கு வித்யாகர்வம் அதிகப்பட்டுவிட்டது. ஆத்மஞானிக்கு அஹங்காரம் அழிவைத் தரும்.

**யாக்ஞவல்க்கியர்:**— நண்பர்களே! நான் கர்வத்தினால் அப்படிச் சொல்லவில்லை. உண்மையைத்தானே கூறினேன்.

**வைசம்பாயனர்:**—(கோபத்துடன்) அடே! எதுவடா உண்மை? இந்த பிராமணர்கள் அல்ப தேஜஸுள்ளவர்களென்று சொன்னாயே, அதுவா உண்மை?

**யாக்ஞவல்க்கியர்:**— ஐயனே கோபம் வேண்டாம். பலபேர்கள் சேர்ந்து விரதங்கள் செய்யும்போது யாருக்காவது ஒருவருக்கு விரதலோபம் வரலாம். ஆகையினால் அடியேன் ஒருவனைச் செய்ய அநுமதி வேண்டினேன்.

**வைசம்பாயனர்:**—பிராம்மணர்களை அவமானம் பண்ணுகிறாய். இவர்கள் அல்பமான வீர்யமுள்ளவர்களானால் இவர்களது குருவாகிய நானும் அல்ப தேஜஸுள்ளவன் என்றுதானே அர்த்தம்?

**யாக்ஞவல்க்கியர்:**—(காதுகளைப் பொத்திக்கொண்டு) சிவ சிவ! நான் அப்படி ஒருக்காலும் நினைக்கவில்லை. ஸ்வப்பனத்திலும் அவ்விதம் நினைக்கமாட்டேன். என் நிழலை மிதித்தவனும் கூட குருத்துரோகியாகமாட்டான்.

**வைசம்பாயனர்:**— போதுமடா! நிறுத்து உன் அதிகப்பிரசங்கத்தை. என் உத்தமமான சிஷ்யர்களைப் பழித்தாய். அன்று ராஜாவின் அதிருப்திக்குப் பாத்திரமானாய். என் அருமை மருமகன் பாலகனுக்கு சாபம் வாங்கி வைத்தாய். இப்படிப்பட்ட சிஷ்யன் எனக்கு வேண்டாம்.

**யாக்ஞவல்க்கியர்:**—(அடிபணிந்து) ஐயனே, க்ரோதம் வேண்டாம். ஸமாதானமடையுங்கள். தேவரீரிடத்தில் அதிகமான பக்தியினால், அன்பினால். இப்படிச் சொன்னேனே அல்லது வேறில்லை. "அதிஸ்நேஹ: பாபசங்கீ" யான் ஏதாவது தவறுதலாகச் சொல்லியிருந்தால் மன்னித்துவிடுங்கள். இச்சமயத்தில் இப்படி கோபப்படுவதை தங்கள் உடம்பு தாங்காது.

**வைசம்பாயனர்:**—போடா! உன்னுடைய ஸமாதானங்கள் ஒன்றும் தேவையில்லை. என்னுடைய ஆக்ஞையை மீறிப்பேசிக்கொண்டே போகிறாய். இப்படிப்பட்ட நீ எனக்கு சிஷ்யனாக இருக்கத்தகுதியுள்ளவனில்லை. ஆகையால் என்னிடம் நீ கற்ற வேதங்களைக் கக்கிவிடு.

**போதாயனர் முதலிய சீடர்கள்:**—ஐயனே க்ஷமித்துக் கொள்ளுங்கள். நண்பரே! வெளியில் போய்விட்டு வாரும் எதிர்த்துப்பேசி கோபத்தைக்கிளறவேண்டாம்.

**யாக்ஞவல்க்கியர்:**— (கோபத்துடன்) வீணைக்கோபிக்கும் உம்மாலேயும் எனக்கு ஒன்றும் ஆகவேண்டியதில்லை. உம்மிடம் ஓதிய வேதமும் எனக்கு வேண்டாம். இதோ திரும்பத் தந்துவிடுகிறேன்.

(திரைக்குள் போய்த் திரும்பவந்து)

உதிரத்தினுல் பூசப்பட்ட ரூபமுள்ளவைகளான யஜுர்வேதங்களைக் கக்கிவிட்டேன். உண்ட சோற்றைக் கக்குவதுபோல் வெளியே தள்ளிவிட்டேன், எடுத்துக் கொள்ளும். நீரும் இந்த சீடர்களும் ஸுகமாய் வாழுங்கள். நான் போய்வருகிறேன்.

(இந்தக் கொடுமையான ஸம்பவத்தைக் கண்ட சீடர்கள் திகைத்து நிற்கின்றனர். மஹரிஷியும் ஒருகணம் ஸ்தம்பித்துவிட்டார். பிறகு எல்லோரும் சாந்தி அடைந்தனர்.)

**வைசம்பாயனர்:**—ஹே யாக்ஞவல்க்கியா! நீ சுகமே போய்வா. பிரம்மராதருடைய பிள்ளையே! நீ வாழ்வாயாக, இப்போது நான் குருவாகவும் மாமனாகவும் இருந்து உன்னை ஆசீர்வதிக்கவில்லை. ஒரு பிராம்மணனாக இருந்து ஆசி வழங்குகிறேன். நீ சுகமே போய்வா! பிரம்மஹத்தி பிடித்த பின்னும் எனக்கு பிராம்மண தேஜஸ் இருக்கிறதென்றே நினைக்கிறேன். ஆகையால் நீ விரும்பிய விதமே வாழ்வில் வெற்றிபெறுவாய்.

**யாக்ஞவல்க்கியர்:**—ஆசார்யனே, போய்வருகிறேன். நடந்ததை மன்னித்தும், மறந்தும் ஆசிவழங்கியதற்கு அநந்தகோடி நமஸ்காரம் (ஸாஷ்டாங்கமாக வணங்கி எழுந்திருந்து) போய்வருகிறேன் நண்பர்களே, உங்களுக்கும் வணக்கம். (மனம்போனபடி போய்விடுகிறார்.)

**வைசம்பாயனர்:**—என் பிரிய சிஷ்யர்களே, புகைந்த கொள்ளி புறம்போனது நல்லதுதான். அவன் கக்கிய வேதத்தை நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கள். அவனுக்கு நான் பல அரிய விஷயங்களை உபதேசம் செய்திருந்தேன் அவைகள் வீண்போகலாகாது. நீங்கள் அதை உண்ணுங்கள்.

**சிஷ்யர்கள்:**—அவர் கக்கியதை எப்படி உண்ணுவது? வழிசொன்னால் செய்கிறோம்.

**வைசம்பாயனர்:**—சிஷ்யர்களே, நீங்கள் இதை இப்படியே உண்ணுவது தகாது. தித்திரிப்பறவைகளின் உருவம்கொண்டு சாப்பிடுங்கள். அதுவே சாலவும் சிறந்தது. (சிஷ்யர்கள் திரைக்குள் போய் திரும்பவந்து)

**சிஷ்யர்கள்:**—ஆசாரியனே, நாங்கள் தங்கள் கட்டளைப்படியே தித்திரி பக்ஷிகளாக ஆகி நண்பர் கக்கிய வேதங்களை பாக்கியில்லாமல் உண்டுவிட்டோம்.

**வைசம்பாயனர்:**— குழந்தைகளே ! நீங்கள் தித்திரி பக்ஷிகளாக ஆகி உண்டதால் இந்த யஜுஸுக்களுக்கு **'தைத்திரீயசாகை'** என்ற பெயர் ஏற்பட்டு விளங்கும். உங்களுக்கும் தைத்திரீயர் என்ற நாமம் சித்திக்கும். எனக்கு அதிக சந்தோஷம் வரும்படி நீங்கள் நடந்து கொண்டதால், உங்கள் புகழ் எங்கும் பரவும். இந்த யஜுர்மந்திரங்களுக்கு மற்றவைகளைவிட அதிகமாக கர்மாக்களில் விநியோகமேற்படும். என்னுடைய பூர்ணமான ஆசீர்வாதம் எப்போதும் உங்களுக்கு உண்டு.

**சிஷ்யர்கள்:**—தங்களுடைய பிரம்மஹத்தி தோஷம் நீங்குவதற்கான விரதங்களை ஆரம்பிக்க அனுமதி அளியுங்கள்.

**வைசம்பாயனர்:**— சரி குழந்தைகளே, இன்றே தொடங்கலாம். (த்ரிசங்குவின் கையைப் பிடித்துக்கொண்டு உள்ளே போகிறார்.)

போதாயனர்:— வைகானஸரே! யாக்ஞவல்க்கியர் பிரிந்துபோனது வருத்தமாகத்தானிருக்கிறது.

மாஹாசமஸ்யர்:— பத்து வருஷங்களுக்கு மேல் சேர்ந்து வாழ்ந்தபின் பிரிந்துபோனு கஷ்டமாகத்தானே இருக்கும்.

வைகானஸர்:— எப்படியோ தொடங்கி, என்ன வெல்லாமோ நடந்து, கடைசியில் எங்கோ போய் முடிந்துவிட்டது.

போதாயனர்:— என்ன செய்வது? வி தி யா ரை வி ட் ட து? பெரியவர்களுக்குக் கோபம் வந்தாலும் அதனுல் உலகத்திற்கு க்ஷேமம் உண்டாகும் என்று சொல்லுவார்கள்.

மாஹாசமஸ்யர்:—நீர் சொல்லுவது சரிதான் நான் அப்படிக் கூறக் கேட்டிருக்கிறேன். "நாரதர் கலகம் நன்மையில் முடியும்" என்று.

வைகானஸர்:— இந்த அஸம்பாவிதங்கள் இத்துடன் முற்றுப்பெறட்டும்.

போதாயனர்:— மேகங்கள் கலைந்துவிட்டன. சூரியன் பிரகாசிக்கின்றுன். அவன் ஸர்வமங்களங்களையும் அருள்செய்வான்.

த்ரிசங்கு:— (வந்துகொண்டே) நண்பர்களே! குரு நாதர் உங்களை அழைத்து வரச்சொன்னுர். விரதம் தொடங்க கோமதியில் நீராடிவிட்டு வரச்சொன்னுர்.

மற்றவர்கள்:— இதோ வந்துவிடடோம்.

(போகிறுர்கள்)

(திரை விழுகிறது.)

முதலாவது அங்கம் முற்றிற்று.

# இரண்டாவது அங்கம்

## காட்சி 1

(திரை விலக)

[மஹாமேரு மலையின் கிழக்குப் பார்சுவத்தில் யாக்ஞவல்க்கியரின் ஆசிரமம் தென்படுகிறது. திரைக்குள் நிழற்காட்சியாக யாக்ஞவல்க்கியர் பஞ்சாக்கினி மத்தியில் ஒற்றைக்காலில் நின்று சூரிய பகவானை நோக்கி தவம் செய்யும் அற்புதமான காட்சி தெரிகிறது. வெளியே, ஒரு வடவிருக்ஷத்தினடியில் உட்கார்ந்து யாக்ஞவல்கியரின் சிஷ்யர்கள் இருவர் ஸம்பாஷித்துக்கொண்டிருக்கின்றனர்.]

**காண்வர்:**— நண்பரே, நாம் இங்குவந்து ஒரு வியாழ வட்டம் சென்றுவிட்டது !

**தத்யங் ஆதர்வணர்:**— ஆமாம்! தோழரே. இப்பொழுது குருபகவான் துலாத்தில் ஸஞ்சரிக்கிறார். அப்பொழுதும் வியாழன் துலாத்தில் தான் இருந்தார். எனக்கு இன்றைக்குப் போலிருக்கிறது நாமிருவரும் வைசம்பாயன மகரிஷியின் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்ததும்—

**காண்வர்:**— அப்போது யாக்ஞவல்க்கியர் வெளியே வருவதற்கும் சரியாயிருந்தது. அவரைப் பின்பற்றி வனம், வனாந்தரங்கள், காடுகள், நாடுகள் கடந்து இந்த மேரு மலைக்கு வந்தோம். இங்கு நம் குருவாகிய யாக்ஞவல்க்கியர் தவம் செய்து வருகிறார்கள். நாமும் சுச்ரூஷை செய்து வருகின்றோம்.

**தத்யங் ஆதர்வணர்:**— ஆமாம், குருகுலவாஸம் செய்து யஜுர்வேத அத்தியயனம் செய்ய வைசம்பாயன மகரிஷியின் ஆசிரமத்திற்கு வந்தோம். ஆனால் நமக்கு வேறுவிதமான பணி கிடைத்திருக்கிறது. நமது குரு புதிதான வேதங்களை அறிவதற்காக வேதவியாஸர் உபதேசிக்காத, ஆகையினால் வைசம்பாயன

மகரிஷிக்குத் தெரியாத யஜுஸ்ஸுகளை அறியக் கடுந்தவம் புரிகிறார். அவருக்குப் பணிவிடை புரியும் பாக்கியம் நமக்குக் கிட்டியிருக்கிறது.

**காண்வர்:**— நண்பரே! நடப்பது எல்லாம் நன்மைக்கே. பிரம்மராதருடைய புத்திரரான யாக்ஞவல்க்கியரும் ஸாமான்யமான முனிவரல்ல. இவர் தவம் கட்டாயம் வெற்றிபெறும். அயாதயாமங்களை இவர் அறிவார். நமக்கும் உபதேசிப்பார். அதிருக்கட்டும், போன மாதம் மிதிலைக்குச் சென்று நேற்றுத் திரும்பி வந்தீரே, ஏதாவது விசேஷமுண்டோ?

**தத்யங் ஆதர்வணர்:**—மிதிலாபுரியிலிருக்கும் வயோதிகர்களான என் மாதாபிதாக்களைப் பார்த்துவிட்டு வரும் வழியில் போதாயனரை ராஜவீதியில் சந்தித்தேன். இங்குள்ள விருத்தாந்தங்களையெல்லாம் கூறினேன். ஆவலுடன் கேட்டார். அங்கு நடந்த ஸம்பவங்களையும் விடாமல் கூறினார்.

**காண்வர்:**— நண்பரே, நமது பரமகுருவான வைசம்பாயனருக்கு பிரம்மஹத்திதோஷம் நீங்கிவிட்டதல்லவா?

**தத்யங் ஆதர்வணர்:**— நமது குருவான யாக்ஞவல்க்கியர் சென்ற பிறகு மற்ற சீடர்கள் எல்லாரும் சேர்ந்து விரதங்களை அனுஷ்டித்ததாகவும், அதன் பயனாக மகரிஷியின் தோஷம் நீங்கி பழையபடி பூர்ணமான பொலிவுடன் விளங்குவதாகவும் கூறினார்.

**காண்வர்:**—பிறகு என்னென்ன விசேஷங்கள் சொன்னார்?

**தத்யங் ஆதர்வணர்:**— நண்பரே! காத்தியாயனர் முதலிய முனிகுமாரர்கள் சிஷ்யர்களாகச் சேர்ந்திருப்பதாகவும் யஜுர்வேதத்தை 27 சாகைகளாகப் பிரித்து சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து வருவதாகவும் கூறினார். ஒரு அதிசயமான நிகழ்ச்சியைப் பற்றியும் நவின்றார்.

**காண்வர்:—** அதென்ன அற்புதம்? என் மனம் அறியத் துடிக்கிறது. சீக்கிரமாகச் சொல்லும்.

**தத்யங் ஆதர்வணர்:—** ஜனகமகாராஜாவுக்கு ஸகல லக்ஷணங்களும் பொருந்திய குமாரன் அவதரித்திருக்கிறனும்.

**காண்வர்:—** தோழரே! குமாரன் பிறப்பதில் அதிசயமென்ன இருக்கிறது? சந்தோஷமான செய்தி என்று கூறும்.

**தத்யங் ஆதர்வணர்:—** காண்வரே, மகிழ்ச்சி தரும் ஸம்பவம் தான். அதில் அதிசயமும் கலந்திருக்கிறது. எப்படியென்றால் குழந்தை பிறந்ததிலிருந்தே ப்ரஹ்ம தேஜஸ்ஸுடன் விளங்குகிறனும். வைசம்பாயனரின் மருமகனை மரணமடைந்த பாலகனைப்போன்ற முகச்சாயல் இருக்கின்றதாம். பாலகனே ராஜகுமாரனாக அவதாரம் பண்ணியிருக்கிறதாக எல்லாரும் பேசிக் கொள்ளுகிறார்களாம்.

**காண்வர்:—** சாதாரண ஜனங்கள் பலவிதமாகப் பேசுவார்கள். ஆனல் அரசன், மஹரிஷி, ராஜகுரு இவர்கள் என்ன அபிப்பிராயம் தெரிவிக்கிறார்கள்?

**தத்யங் ஆதர்வணர்:—** அவர்களும் அதை நம்புகிறார்கள். உபநயனம் ஆனபின் ராஜகுமாரனை வைசம்பாயனரின் ஆசிரமத்துக்கே குருகுலவாஸத்துக்கு அனுப்பப் போவதாக ஸதானந்தரே மஹரிஷியிடம் கூறினராம்.

**காண்வர்:—** ரொம்பவும் ஆச்சரியமும், ஆனந்தமும் விளைவிக்கும்படியான செய்திகள் தான். மாத்யான்ஹிக காலம் நெருங்கிவிட்டது. ஸ்னானத்துக் போவோமா?

**தத்ய ஆதர்வணர்:—** ஆகட்டும்.

இருவரும் எழுந்திருக்கிறார்கள்)

(திரை விழுகிறது.)

காட்சி 2

[திரை விலக கிழற்காட்சியாக யாக்ஞவல்க்கியர் தவம்செய்வது தென்படுகிறது. எதிரே சூரிய பகவான் தரிசனம் கொடுக்கிறார். யாக்ஞவல்க்கியர் சூரிய பகவானை நமஸ்கரித்து துதிக்கின்றார்.]

**யாக்ஞவல்க்கியர்:**—ஹே சூரிய பகவானே, உமக்கு நமஸ்காரம். மோக்ஷத்திற்கு வழியானவரே, அளவற்ற தான ருக், யஜுஸ், ஸாமங்களின் உருவமாக விளங்கு பவரே, உமக்கு வணக்கம். வெய்யிலுக்கும் மழைக்கும் காரணமானவரே! உலகம் முழுவதற்கும் காரணமான வரே. எனது பிராணமங்களை ஸமர்ப்பிக்கின்றேன். கலை, காஷ்டை, நிமிஷம் முதலான காலங்களை அறிவிப்பவரே பிரணவஸ்வரூபமானவரே, நமஸ்காரம். தன் கிரணங் களாலேயே சந்திரனைப் போஷித்து, தேவதைகளையும், பித்ருக்களையும் ரக்ஷிப்பவரே, ஆதித்யபகவானே, வணங்குகிறேன்.

**சூரியபகவான்:**—முனிவரே! உம்முடைய தவத்தால் ஸந்தோஷம் அடைந்தேன். உமக்கு வேண்டும் வரத் தைக்கேளும்.

**யாக்ஞவல்க்கியர்:**— பகவானே, உம்மை முன்னும் பின்னும் பார்சுவங்களிலும் வணங்குகிறேன். வைசம் பாயன மகரிஷிக்குத் தெரியாத யஜுர்வேதங்களை எனக்கு பிரஸாதிக்கவேண்டும். கிருபை பண்ண வேண்டும்.

**சூரியபகவான்:**— யாக்ஞவல்க்கிய முனிவரே, மிக வும் மகிழ்ச்சி. நல்ல வரம் கேட்டீர், தந்தேன். நான் இப்பொது உமக்கு உபதேசிக்கப்போகும் மந்திரங்களை வேதவியாஸர் வைசம்பாயனருக்கு உபதேசம் செய்ய வில்லை. ஆகையினால் அவருக்குத்தெரியாது. ஹயக்கிரீவ மூர்த்தியாக இருந்து வேதங்களை உபதேசிப்பது சிலாக் கியம். ஆகவே அவ்விதமாகவே குதிரை முகத்தோடு ஆவிர்பவித்து அத்தியயனம் சொல்லி வைக்கிறேன்.

**யாக்ஞவல்க்கியர்:**—பகவானே, தங்கள் சித்தம் அடியேன் பாக்கியம்.

(சூரியபகவான் மறைந்து குதிரை முகத்துடன் திரும்பவும் தோன்றுகிறார்)

**சூரியபகவான்:**— என் பிரியமான சிஷ்யரே, கவனமாகக்கேளும். இப்போது நான் உமக்கு கூறப்போகும் மந்திரங்களுக்கு சுக்லயஜுர்வேதம் என்று பெயர். இவைகளை ஆதியில் பிரஜாபதியிடமிருந்து ஸாஞ்ஜீவியின் புத்திரரான மாண்டூகாயனி முதலிய முனிவர்கள் பெற்று பரம்பரையாக அத்தியயனம் பண்ணப்பட்டவையாகும். இப்போது இவற்றை நீர் அடைந்து உலகில் விளங்கும்படி செய்யப்போகிறீர். இதனால் உம் புகழ் பார் உள்ளளவும், கார் உள்ளளவும், மலை உள்ளளவும், நிலையாகப் பேசப்படும்.

**யாக்ஞவல்க்கியர்:**—ஆசார்ய பகவானே, தங்கள் கடாக்ஷத்தால் அடியேனும் கடைத்தேற அருள்புரிய வேண்டும். தங்கள் ஆசியால் அடையமுடியாததும் உண்டோ? தயவுபுரியவேண்டும் காத்துக்கொண்டிருக்கிறேன்.

**சூரியபகவான்:**—முனிவரே! உம் தவமும் குருபக்தியும், மேதையும், வினயமும், போற்றுதற்குரியனவேயாகும். ஆனைக்கும் அடிசறுக்கும் என்பதுபோல் நீர் வைசம்பாயன மகரிஷியிடம் மனஸ்தாபப்பட்டு வந்தது உலகத்திற்கும் ஒரு விதத்தில் நன்மையே. எனக்கும் ஒரு பெரிய சுமையின் பாரம் இறங்கிவிடும், கற்றவித்தையைக் கற்கப் பாத்திரமான சீடன் கிடைப்பதைவிட ஒரு குருவிற்கு மகிழ்ச்சிதரும் விஷயமுமுண்டோ? இல்லை! இல்லவேயில்லை.

**யாக்ஞவல்க்கியர்:**—ஐயனே, எல்லாம் எமையாளும் ஈசன் செயல். இறைவனையும் குருவையும் வேறாக ஒருநாளும் மதித்ததில்லை.

**சூரியபகவான்**:— அப்படியா சீடரே, மிகவும் சந்தோஷம்.

**யாக்ஞவல்க்கியர்**:— குருநாதரே, எப்போதாவது ஈசுவரனுக்கும் ஆசாரியனுக்கும் ஏற்றத்தாழ்வு குறிக்க வேண்டிய ஸந்தர்ப்பம் நேருமாயின் அப்போதும் குரு நாதருக்கே ஏற்றம் கூறுவேன். இது திண்ணம் இது என் பூஜ்ய பிதாவான பிரம்மராதர் அருளிய உபதேச மாகும். ஸ்வாமி, உபதேசிக்கும்படி வேண்டுகிறேன்.

**சூரியபகவான்**:—ஸௌம்யரே, கவனமாகக்கேளும்.

**ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते ।**
**पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥**
**ओं शान्तिः शान्तिः शान्तिः**

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம், பூர்ணாத் பூர்ணமுதச்யதே ।
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே ॥
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ।

(இதை யாக்ஞவல்க்கியரும் திரும்பச் சொல்லுகிறார். தொடர்ந்து உபதேசம் செய்கிறார் சூரியபகவான்.)

(திரை விழுகிறது.)

## காட்சி 3

(திரை விலக)

[மகாமேரு பர்வதத்தில் யாக்ஞவல்க்கிய முனிவரின் ஆசிரமம். தர்ப்பாஸனத்தில் முனிவர் பிரம்ம தேஜஸ்ஸுபொலிய வீராஸனத்தில் உட்கார்ந்திருக்கிறார். இரு பக்கங்களிலும் காண்வர், தத்யங் ஆதர்வ ணர் முதலிய சீடர்கள் அமர்ந்திருக்கின்றனர். உரையாடல் நடை பெறுகிறது.]

**யாக்ஞவல்க்கியர்**:—என் பிரிய சிஷ்யர்களே, எனக்கு சூரியபகவான் கருணை கூர்ந்து உபதேசித்த வேதத் திற்கு "சுக்ல யஜுர்வேதம்" என்றும் "வாஜஸநேய ஸம்ஹிதை" என்றும் நாமங்கள் உண்டு. வாஜி என் ஞல் குதிரை. குதிரை வடிவத்தில் வந்து ககன் உபதே

சித்ததால் இப்பெயர் பெற்றது. இந்த வேதத்தை அத்தியயனம் செய்கிறவர்களுக்கு வாஜஸனேயர் என்னும் பெயர் உண்டாகப்போகிறது.

**காண்வர்:**—யாராவது ஒருவர் கேட்டால் நம்பமுடியாத ஆச்சரிய சம்பவங்கள குருவின் வாழ்க்கையில் நடைபெறுகின்றன. நான் கூட இருந்ததினால்தான் பிழைத்தேன், நம்புகிறேன்.

**யாக்ஞவல்க்கியர்:**—குழந்தைகளே, உலகில் நடக்கக் கூடாதது ஒன்றுமில்லே. ஆசாரிய பக்தியும், விடாமுயற்சியும் இருக்கவேண்டும். அப்போது மனிதனல் சாதிக்க முடியாதது ஒன்றுமேயில்லே.

**தத்யங் ஆதர்வணர்:**—விசுவாமித்திர மஹரிஷியின் அதி அற்புதமான சரிதங்களே என் பிதாமஹரிடமிருந்து கேட்டுத்தெரிந்துக்கொண்டிருக்கிறேன் அவைகளேவிட அதிசயமானது குருநாதரின் சரித்திரம்.

**யாக்ஞவல்க்கியர்:**—சிஷ்யர்களே! எல்லாம் குருநாதாள் அனுக்ரஹம். பிரத்யக்ஷமாக எல்லோருக்கும்-பண்டித பாமர வித்யாஸமில்லாமல், ஏன்! புண்யசாலிகள், பாபிகள் என்ற பேதம் இல்லாமல்—காட்சி அளித்துப் போஷித்து அவரவர் கர்மாக்களேச் செய்யத்தூண்டி பிரபஞ்சத்தை நடத்திவரும் — இயக்கிவரும் – ஸூர்ய பகவானுக்கு வேறாக ஒரு தெய்வமுமுண்டோ?

**காண்வர்:**—ஸ்வாமி! எனது நண்பர் தத்யங் ஆதர்வணர், தன் பெற்றோரைப்பார்ப்பதற்கு ஊருக்குப்போக விரும்புகிறார். தங்களிடம் கூற ஸங்கோசப்படுகிறார்.

**யாக்ஞவல்க்கியர்:**—குழந்தாய், நீ ஸுகமே போய் வா. மிதிலைக்குச் சென்று உன் மாதாபிதாக்களே வணங்கி அவர்களுக்கு பணிவிடைசெய்து வாழ்வாயாக. அத்யயனத்தை ஒரு நாளும் கைவிடாதே. உரிய காலத்தில் உன் பெற்றோர் விருப்பப்படி நல்ல குலத்திலுதித்த கன்னிகையை மணந்து கிருஹஸ்தனக வாழ்ந்து வருவாயாக.

**தத்யங் ஆதர்வணர்:**—(எழுந்து குருவை வணங்கி) ஸ்வாமீ, தங்களைப் பிரிந்து போவது எனக்கு மிகவும் மனதிற்கு கிலேசத்தைக் கொடுக்கிறது ஆயினும் பெற்றோரின் கட்டளையை மீறவும் முடியவில்லை. தர்ம சங்கடமான நிலை; இருதலைக்கொள்ளி எறும்புபோல் என் உள்ளம் ஊசலாடுகிறது.

**யாக்ஞவல்க்கியர்:**—வத்ஸா! வருத்தம் வேண்டாம். உன் பிரிவு எனக்கும் வருத்தம் தரவில்லையா என்ன? ஆயினும் அதை அடக்கிக்கொள்கிறேன். காண்வன் என்னோடு இருப்பான்: அவன் நைஷ்டிக பிரம்மசாரியாகவே இருப்பான். நீ ஊருக்குப்போய் இல்லறத்தை ஏற்று சுகமாக வாழ்வாயாக. மற்ற மூன்று ஆசிரமத்தார்களும், அதாவது பிரம்மசாரி, வானப்பிரஸ்தர், ஸன்னியாசி இவர்கள் மூவரும் கிருஹஸ்தனையே ஆச்ரயித்து வாழவேண்டியிருக்கிறது. ஆகவே இல்லறமும் நல்லறமேயாகும்

**தத்யங் ஆதர்வணர்:**—ஸ்வாமீ, வணக்கம் போய் வருகிறேன். நண்பர்களே, உங்களுக்கும் என் நமஸ்காரங்கள். வருகிறேன்.

(எல்லோரையும் வணங்கி விடைபெற்றுச் செல்கிறார். எல்லோரும் பிரிவு துக்கம் தாங்காமல் கண்ணீரைத் துடைத்துக்கொள்கின்றனர். சிறிது தூரம் சென்றபின் திரும்பிவந்து)

ஸ்வாமீ, இனி தங்களைப் பார்ப்பது எப்போது?

**யாக்ஞவல்க்கியர்:**— ஸௌம்யா! மஹா மேருவில் எனக்கு இன்னும் கொஞ்சகாலம்கூட வேலையிருக்கிறது. இந்த சுக்ல யஜுர் வேதத்தை 15 சாகைகளாகப் பிரித்து சிஷ்யர்களுக்குச் சொல்லிவைத்து அவர்களையும் அழைத்துக்கொண்டு மிதிலைக்கு வருவேன். அப்போது வந்து உன்னை ஆசீர்வதிக்கிறேன். ஸுகமாய் போய் வா. என் பூர்ணமான ஆசீர்வாதம் உனக்கும் உன் பரம்பரைக்கும் எப்போதும் உண்டு.

(தத்யங் ஆதர்வணர் நமஸ்காரம் செய்துவிட்டுப் போகிறார்.)

**காண்வர்:**—குருநாதரே, ஒரு விண்ணப்பம் கேட்கலாமோ ?

**யாக்ஞவல்க்கியர்:**— குழந்தாய் ஏன் தயக்கம்? எது வேண்டுமானாலும் கேட்கலாம். நான் தான் கோபத்தை வென்றுவிட்டேனே.

**காண்வர்:**—தாங்கள் மிதிலை போனால் வைசம்பாயனரைப் பார்ப்பீர்களா ?

**யாக்ஞவல்க்கியர்:**—கட்டாயம் தரிசிப்பேன். எங்களுக்குள் இருக்கும் மனஸ்தாபம் தீர்ந்து அளவளாவிக்கொள்ளுவோம். நான் வினயமாக வணங்குவேன். ஆசீர்வதித்து அவரும் என்னை அணைத்துக்கொள்ளுவார். இதில் உனக்கு சிறிதும் ஸந்தேஹம் வேண்டாம். பெரியவாளின் கோபம் உடன் தணிந்துவிடும்.

**காண்வர்:**—அதி பிரசன்னம் கேட்டதற்கு மன்னித்துவிடுங்கள். ஏதோ மனதில் தோன்றியதை கேட்டுவிட்டேன்.

**யாக்ஞவல்க்கியர்:**—இதில் தவறுதல் ஒன்றுமில்லை. காலதேவன் எல்லாத்துயரங்களையும் பூசல்களையும் போக்கிவிடுகிறான். காலப்போக்கில கோபம், தாபம், துக்கம், வஞ்சம் எல்லாம் மறைந்து மண்ணாகிவிடுகின்றது. மனிதர்கள் மன்னிக்கவும் மறக்கவும் கற்றுக்கொள்ளுகின்றனர்.

**காண்வர்:**—குருநாதரே, மாத்யான்ஹிக ஸ்நானத்துக்குப போகலாமா ? காலம் நெருங்கிவிட்டதென்று நினைக்கிறேன்.

**யாக்ஞவல்க்கியர்:**—சீடர்களே, போவோம் வாருங்கள். பேசிக்கொண்டிருந்ததில் பொழுது போனதே தெரியவில்லை.

(எல்லோரும் எழுந்து போகிறார்கள்)

(திரை விழுகிறது)

இரண்டாவது அங்கம் முற்றும்.

## மூன்றாவது அங்கம்

### காட்சி 1

(திரைக்குள்ளே)

ईशिता सर्वभूतानां सर्वभूतमयश्च यः ।
ईशावास्येन संबोध्यं ईश्वरं तं नमाम्यहम् ॥

(ஈசிதா ஸர்வபூதாநாம் ஸர்வபூதமயச்ச ய: ।
ஈசாவாஸ்யேந ஸம்போத்யம் ஈச்வரம் தம்
நமாம்யஹம் ॥)

என்ற பாடல் கேட்கிறது. திரை விலக, தத்யங் ஆதர்வணரின் இல்லம். அவரும் அவருடைய குமாரர் ஸுபோதரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கின்றனர்.)

**தத்யங் ஆதர்வணர்:**— குழந்தாய் ஸுபோதா, நீ ஆசைகளை அடக்கியிருக்கிறாய். இல்லறத்தானின் நியமங்களை வழுவாமல் அனுஷ்டித்து வருகிறாய். அத்துடன் மோக்ஷ இச்சை உள்ளவனாகவும் இருக்கிறாய். எல்லாவற்றிற்கும் மேலாக என்னையே சரணமடைந்திருக்கிறாய் உனக்கு மகிழ்ச்சியுடன் உபதேசம் செய்கிறேன்.

**ஸுபோதர்:**— தந்தையே, எல்லாம் தங்கள் ஆசீர்வாதம். தாங்கள் மஹரிஷி யாக்ஞவல்கியரிடமிருந்து கற்றவேதங்களை அடியேனுக்கு அருளவேண்டும். அவர் சரித்திரத்தை தாங்கள் கூறியது முதல் எனக்கு அவர் உபதேசங்களைக் கேட்க ஆவலாயிருக்கிறது. நிலவுக்கு ஏங்கும் சகோரம் போலவும், மழைக்குத் தவிக்கும் சாதகம் போன்றும் நான் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—வத்ஸா! அப்படியே உனக்குத் தத்துவங்களைக் கூறுகிறேன். கவனமாகக்கேள். முதலில் சாந்தி பாடம் சொல்லுவோம்.

ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥
ओं शान्तिः शान्ति शान्तिः ।

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே ।
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:
(இருவரும் சொல்லுகின்றனர்)

**ஸுபோதர்:**—குருநாதரே இந்த சாந்தி மந்திரத்தின் பொருளை விளக்கும்படி வேண்டுகிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—ஸௌம்யனே! முதலில் பதங்களின் பொருளைக்கூறிவிட்டுப் பின்னல் தத்துவத்தை விளக்கமாகக் கூறுகிறேன். அது பூர்ணம். இதுவும் பூர்ணம். பூர்ணத்திலிருந்து பூர்ணம் உதயமாயுள்ளது பூர்ணத்திலிருந்து பூர்ணத்தை எடுத்த பின்னும் பூர்ணமே எஞ்சி நிற்கின்றது. மூன்றுவிதமான அமைதியும் நிலவட்டும்.

**ஸுபோதர்:**—ஸ்வாமீ! பூர்ணத்திலிருந்து பூர்ணத்தை எடுத்தால் ஒன்றும் மிஞ்சி நிற்காதே! முழுமையாக எப்படி மிஞ்சியிருக்கமுடியும்? தாங்கள் கூறுவது கணித சாஸ்திரத்துக்கு முரணாக இருக்கின்றதே.

**தத்யங் ஆதர்வணர்:**— அப்பனே! "பரம்பொருள் கணித நூல் நியதிக்கு அடங்காது. விளக்கமாகக் கூறுகிறேன். கேள். அது பூர்ணம் அது என்பது பரப்ரஹ்மத்தைக் குறிக்கிறது. ஜகத்காரணமான அது பூர்ணம் எங்கும் நிறைந்துள்ளது. எல்லாமாக உள்ளது. அதைக் காட்டிலும் வேறாக ஒன்றுமில்லை. இதுவும் பூர்ணம்: இது என்பது காரிய ப்ரஹ்மத்தைக் குறிக்கும். அதாவது நாமரூப உபாதிகளுடன் கூடிய ஜீவனைத்தன்மையும் பூர்ணம் தான். பூர்ணமான காரண ப்ரஹ்மத்திலிருந்து

தான் பூர்ணமான கார்யப்ரஹ்மம் வெளிவந்திருக்கிறது. உபாதிகளான நாம ரூபங்கள் பூர்ணமாக இல்லாவிட்டாலும் அதை விலக்கி சைதன்ய ஸ்வரூபத்தை மட்டும் பார்த்தால் ஜீவாத்மாவும் பூர்ணம் தான். உபநிஷத்துக்களாலும் ஸத்குருவின் உபதேசத்தாலும், பரமாத்மாவிடமிருந்து தன்னை வேறுபடுத்திக்காட்டுகிற அவித்யையால் தோன்றும் நாமரூப உபாதிகளின் தன்மையை நன்கு ஆராய்ந்து அவைகளை விலக்கி தன் ஸ்வரூபத்தை மட்டும் நன்கு கவனித்துப் பார்த்தால் பூர்ணத் தன்மை நன்கு விளங்கும். அப்பொழுது தன்னை பரப்ரஹ்மமாகவே பார்ப்பான். வெவ்வேறாக காட்டிக் கொண்டிருந்த அவித்யையும் உபாதிகளும் விலகி விட்டால் பூர்ணமான ஒரே வஸ்து தான் எஞ்சி நிற்கும். மஹாவாக்யங்களின் கருத்தைத் இந்த மந்திரத்தில் காணலாம்.

**ஸுபோதர்:**—மூவ்வகையிலும் சாந்தி நிலவுக என்று சொன்னீர்களே, அதன் பொருளையும் விளக்கிக் கூற வேண்டும்.

**தத்யங் ஆதர்வணர்:**—ஆதிதைவிக, ஆதிபௌதிக, ஆத்யாத்மிகமான இடையூறுகள் ஏற்படலாம். எதிர்பாராத காரணங்களாலும், அறிந்துள்ள காரணங்களாலும் இடையூறுக்ள் நேரலாம். பிறரெதிருவைக நம்முள்ளேயிருந்து எழலாம் அதற்காக, அவைகளால் நமது பாடம் தடைப்படாமலிருக்க, மும்முறை சாந்தி சொல்லப்பட்டது. இன்று ஈசாவாஸ்யோபநிஷத்தைத் தொடங்குகிறேன்.

ओं ईशावास्यमिदः सर्वं यत्किंच जगत्यां जगत्।
तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्यस्विद्धनम् ॥

ஓம் ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத்।
தேந த்யக்தேன புஞ்ஜீதா மா க்ருத: கஸ்யஸ்வித் தனம்॥

(குரு சொல்ல சீடனும் உடன் சொல்லுகிறான்)

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய், மந்திரத்தின் அர்த்தம் சொல்லுகிறேன். நிலையற்ற இவ்வுலகில் தோன்றி மறையும் சராசரப் பொருட்கள் எல்லாம் ஈசனால் வியாபிக்கப்பட்டு இருக்கின்றது. அதாவது எல்லாப் பொருள்களும் ஆண்டவனிடத்திலேயே தங்கியிருக்கின்றன. ஆகவே எல்லாவற்றையும் தியாகம் செய்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். ஒருவர் பொருளையும் நீ இச்சிக்காதே.

**ஸுபோதர்:**—தந்தையே, இந்த ஜகத்தில் எந்த எந்த வஸ்துக்கள் இருக்கின்றனவோ அவை யாவும் ஈசுவர பாவனையினால் மறைக்கவேண்டும் என்பதை அறிந்துகொண்டேன். த்யாகத்தால் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமென்பதன் தாத்பர்யம் என்ன?

**தத்யங் ஆதர்வணர்:**—எல்லாம் பரமாத்மாவின் ஸ்வரூபம். ஒவ்வொன்றிலும் அவர் இருக்கிறார். அவரன்றி ஒன்றும் கிடையாது என்று தெரிந்து கொண்டாயல்லவா? அந்த எண்ணம் திடமாய் விட்டால் 'புத்திரன்' முதலிய ஏஷணாத்ரயங்களை த்யாகம் செய்ய அதிகாரம் உண்டாகிறது. எல்லாவற்றிலும் ஆசா பாசங்களை விட்டுத் தியாகம் செய்துவிட்டு உயிரை ரக்ஷிப்பதற்கு மட்டும் அவசியமானதை ஈசுவரன் கொடுத்ததென்று ஏற்றுக்கொண்டு வாழவேண்டும். எவருடைய பொருளுக்கும் ஆசைப்படாதே. ஜகத் உபாதியை விலக்கிவிட்டு ஈசுவரனை மட்டும் பஜி. நீ ஒருவருடைய தனத்திலும் (அது உன்னுடையதாயிருந்தாலும் சரி, அல்லது பிறருடையதாயிருப்பினும் சரி அதில்) ஆசை வைக்காதே.

**ஸுபோதர்:**—பிறர் பொருளை இச்சிக்கவேண்டாம், என்பது சரி. ஆனால் தன் தனத்தில் பிரியம் வைத்தால் என்ன தவறு?

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய், நான் சொன்னதை நீ சரியாகச் சிந்தித்துப்பார்? தனம் உன்னுடையது

எப்படியாகும்? எல்லாம் ஆத்மா. எல்லாப்பொருளும் ஈசுவரமயம். ஆகையினால் உன் தனமென்றும் பிறர் தனமென்றும் சொல்வதே சரியல்ல. பொருளில் ஆசை கூடாது என்பதே முக்கியம். எவருக்கும் சொந்தமான பொருள் ஒன்றும் இடையாது. இவ்வுலகில் நம்முடன் நிலைத்திருப்பது ஒன்றுமில்லை. எல்லாம் அநித்தியமே. ஆகவே இந்த சூழ்நிலையில் யார் விரும்புகிறது? எதை? எதற்காக என்று ஆலோசித்துப் பார்க்கவேண்டும் மகனே!

**ஸுபோதர்:**—தந்தையே, இப்போது புரிந்துகொண்டேன். ஸத்தியத்தை உணர்ந்த மனிதன் அன்றாட வாழ்க்கையில் நடக்கவேண்டிய விதத்தை அறிந்து கொண்டேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—மகனே! இந்த ஞானமார்க்கம் எல்லாருக்குமே ஏற்பட்டதன்று. துறவறம் ஏற்றுக் கொண்டவர்களுக்கே முற்றிலும் பயன்படும்.

**ஸுபோதர்:**— ஸ்வாமீ! அப்படி ஞானமார்க்கத்தில் நடப்பதற்கு முடியாதவர்கள் என்ன செய்யவேண்டும்? எப்படி வாழ்க்கை நடத்தவேண்டும்?

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய், ஞானமார்க்கத்தில் அதாவது நிவிருத்தி மார்க்கத்தில் போகும் பிரயாணிக்கு அதிகமான ஆற்றலும் மனோதிடமும் தேவை. துறவு உள்ளம் வேண்டும். இவை எல்லோருக்கும் வாய்ப்பது அரிது. இந்த குணங்கள் இல்லாதவர்கள் கர்மமார்க்கத்தில் பழகவேண்டும். இப்போது மந்திரத்தைக் கூறுகிறேன்.

कुर्वन्नेवेह कर्माणि जिजीविषेच्छतँ समाः ।
एवं त्वयि नान्यथेतोऽस्ति न कर्म लिप्यते नरे ॥

குர்வந்நேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேத்சதம் ஸமா: ।
ஏவம் த்வயி நான்யதேதோஸ்தி ந கர்ம லிப்யதே நரே ॥

(இருவரும் சொல்லுகின்றனர்) குழந்தாய் முதலில் பதவுரையைக் கேள், இவ்வுலகில் வாழவிரும்புவோன், விதித்த கருமங்களைச் செய்துகொண்டே நூறாண்டு வாழவிரும்பட்டும். மானிடனே, இதுவே உனக்கு வழி. கருமப்பற்றுத் தொடராமலிருப்பதற்கு இதைவிட வேறுவழியில்லை.

**ஸுபோதர்:**—தந்தையே, விஹித கர்மங்கள் எவை? விளக்கமாக கூறவேண்டும் கர்மமார்க்கத்தில் ஈடுபட்டவன் எதற்காக நூறாண்டுகள் வாழவிரும்பவேண்டும் ?

**தத்யங் ஆதர்வணர்:**— அவரவர் வர்ணத்துக்கும் ஆசிரமத்துக்கும் கட்டளையிடப்பட்ட கர்மாக்களை அவசியம் செய்யவேண்டும். ஒருவனுக்கு புருஷாயுஸ் நூறு என்று வேதம் கூறுகிறது. அவன் நூறாண்டு வரையிலும் வாழலாம். தனக்கு ஏற்பட்ட ஆயுளுள்ளவரை என்பது இதன் கருத்து. பலனைக்கருதாமல் கர்மாக்களை மட்டுமே செய்து வரவேண்டும். பலனைக் கோரவில்லையாகையால் பலன்கள் உன்னை அடையாது. அவற்றுக்கும் உனக்கும் ஒரு ஸம்பந்தமுமில்லை. இந்தப்படி உனக்கு கிடைத்திருக்கும் ஆயுள் பூராவும் நடந்து வரவேண்டும். நூறாண்டு வாழ்ந்தாலும் தன் கடமையைச் செய்துகொண்டே வாழ்வதாக உறுதி கொள்ளவேண்டும். இப்படி நீண்டகாலம் பற்றற்றவாழ்க்கையை மேற்கொண்டால் படிப்படியாக விருப்பங்கள், வெறுப்புக்கள், சுயநலங்கள், பொறாமை, பேராசை முதலிய தீமைகள் தொலைகின்றன. மனம் பரிசுத்தமடைகிறது. பிறகு ஆத்மீக உறுதியுடன் ஞானமார்க்கத்தைப் பின்பற்ற வேண்டிய பக்குவத்தை நாளடைவில் அடையலாம்.

**ஸுபோதர்:**—குருநாதரே! எனக்கு ஒரு ஸந்தேஹம் ஞானமார்க்கத்தையோ அல்லது கர்மமார்க்கத்தையோ பின்பற்றுதவர்களின் கதி என்ன? இவ்விரண்டு வழிகளினின்றும் தவறியவர்களின் விஷயம் என்ன? அவர்கள் கதியாது ?

**தத்யங்க ஆதர்வணர்:**—வத்ஸா! சரியான் கேள்வி.
கவனமாகக் கேள்.

**असुर्या नाम ते लोका अन्धेन तमसाऽऽवृताः ।**
**ताँस्ते प्रेत्याभिगच्छन्ति ये के चात्महनो जनाः ॥**

அஸுர்யா நாம் தே லோகா அந்தேன தமஸாऽऽவிருதா:
தாம்ஸ்தே ப்ரேத்யாபிக்ச்சந்தி யே கே சாஸ்மஹ்னே
ஜனா: ॥

அதாவது, நிவிருத்தி மார்க்கத்திலும் பிறவிருத்தி
மார்க்கத்திலும் ஈடுபடாமல் மனம்போனபடி நடப்பவர்
கள் ஆத்மஹத்தி செய்கிறவர்களுக்கு ஒப்பாவர்.
அவர்கள் செல்லும் - இறந்தபின் பேர்கும் - உலகங்கள்
காரிருள் சூழ்ந்த அசுர உலகங்களாம்.

**ஸுபோதர்:**—கேட்டால் புரிகிறதுபோல் தோன்று
கிறது. விபரமாக விளக்கவேண்டும்.

**தத்யங் ஆதர்வணர்:**—மனிதனைக் பிறந்தபின், ஞான
வாழ்க்கை அல்லது தீவிரமான தொடர்ந்த கர்ம
வாழ்க்கை இவைகளில் ஒன்றைப் பின்பற்றியாக
வேண்டும். இல்லாதவரை அவன் மிருகத்துக்கு ஸமான
மேயாகும். அவர்கள் தற்கொலைசெய்துகொண்டவர்
களேயாவர். அவர்கள் நிச்சயமாக இருண்ட பாதாளத்
தில் விழுந்து தவிப்பார்கள். பண்பாடுகளிலும் ஆத்மீக
உயர்விலும் பயங்கர வீழ்ச்சியை அடைவார்கள். இறந்து
போனவரிடத்தில் உயிர் உணர்ச்சி காணப்படாதது
போல் அஜ்ஞானியிடம் ஆத்மா இருக்கும் அடையா
ளமே செயலில் காணமுடியாது அவர்கள் ஆத்மஞானம்
இல்லாதவர்கள். அஜ்ஞானமாகிற இருளால் மறைக்கப்
பட்டிருக்கிருர்கள். அவர்கள் இறந்தபின் அசுர யோனி
களை அடைந்து மீண்டும் ஸம்ஸாரத்தில் பிரவேசிக்கிருர்
கள். இப்படிக்கீழ்நோக்கியே போய்க்கொண்டு இருப்
பார்கள். அவரது துஷ்கர்மாக்களுக்கு ஏற்ப ஸ்தாவரம்
வரையுள்ள பிறவிகளை அடைவார்கள்.

**ஸுபோதர்:**—தந்தையே, நன்றாக விளங்கிவிட்டது. இப்பிரபஞ்சத்தில் வாழவேண்டிய விதமும், அப்படி வாழாதவர் அடையும் பலனும் பூர்ணமாகத்தெரிவித்தீர்கள். மேலும் நான் அறியவேண்டியவற்றைச் சொல்லுங்கள்.

**ரிஷிபத்னி:**— *(பிரவேசித்து)* வைசுவதேவத்திற்கு எல்லாம் ஸித்தமாயிருக்கிறது. உள்ளே வரலாமே !

**தத்யங் ஆதர்வணர்:**—குமாரா ! இன்று இத்துடன் நிறுத்திக்கொள்வோம். நாளை பிரம்ஹதத்துவத்தைப் பற்றி உபதேசிக்கிறேன். உள்ளே போகலாம். ப்ரியே!

*(இருவரும் எழுந்திருக்கிறார்கள்.)*

*(திரை விழுகிறது)*

## காட்சி 2

*(திரை விலக)*

*[தத்யங் ஆதர்வணரின் இல்லம் தெரிகிறது. முன் காட்சியைப் போல் தந்தையும் தனயனும் உட்கார்ந்து பேசிக்கொண்டு இருக்கின்றனர்.]*

**ஸுபோதர்:**—என் அருமைத் தந்தையே, வணக்கம் ஒரு மனிதன் ஆன்மீக மார்க்கத்தையும் உலக ஸம்பந்தமான நன் முயற்சிகளையும் புறக்கணித்து, சோம்பேறியாக வாழ்ந்தால் அம்மூடன் தன்னையே அழித்துக் கொள்கிறான் என்று நேற்று கூறினீர்கள். இன்று பரம்பொருளைப்பற்றி கேட்க ஆவலுள்ளவனாயிருக்கின்றேன். தயவுசெய்து விளக்கமாகச் சொல்லவேண்டும்.

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய் உன் இஷ்டம்போல் உபதேசிக்கிறேன். ஆனால் எல்லையற்றதை எல்லையுள்ள மொழியினால் விளக்குவது கஷ்டமே. ஆயினும் கூடிய வரை முயற்சிக்கின்றேன். நீயும் அவைகளைக் கேட்டு மனதில் வாங்கிச் சிந்தனை செய் பலன் அடைவாய்.

**ஸுபோதர்:**—ஸ்வாமீ அப்படியே ஆகட்டும்

**தத்யங் ஆதர்வணர்:**—ஸௌம்யா!

अनेजदेकं मनसो जवीयो नैनद्देवा आप्नुवन्पूर्वमर्षत् ।
तद्धावतोऽन्यानत्येति तिष्ठत्तस्मिन्नपो मातरिश्वा दधाति ॥

அனேஜதேகம் மனஸோ ஜவீயோ நைனத்தேவா
ஆப்னுவன் பூர்வமர்ஷத் ।
தத்தாவதோऽன்யானத்யேதி திஷ்டத்தஸ்மின்னபோ
மாதரிச்வா ததாதி ॥

(இருவரும் சொல்லுகின்றனர்)

**தத்யங் ஆதர்வணர்:**—வத்ஸா! ஆத்மா அசைவற்றது ஒன்றாயிருப்பது. மனதைவிட வேகமுள்ளது. தேவர்களும் அதை அடையமுடியாது. ஏனெனில் அவர்கள் அங்கேபோய்ச் சேருவதற்கு முன்னாலேயே அது அங்கே இருக்கிறது. அது நிலையாக இருந்துகொண்டே தாவி ஓடிவருபவர்களைக் கடந்து முன்னால் சென்றுவிடுகிறது அதன் இருப்பினாலேயே வாயுதேவன் எல்லா இயக்கங்களையும் தாங்குகிறான்.

**ஸுபோதர்:**—தந்தையே! எல்லாம் ஒரே புதிராக இருக்கிறதே! அசைவற்றது என்கிறீர்களே! அது ஜடப்பொருளா? நின்றுகொண்டே எப்படி வேகமாகப் போக முடியும்? ஒவ்வொரு குணத்தையும் விளக்கமாக கூறவேண்டும்.

**தத்யங் ஆதர்வணர்:**—பரப்ரஹ்மம் அசைவற்றது என்றால் சக்தியற்றது என்று அர்த்தமில்லை எங்கும் வியாபித்திருக்கும் தன்மையைக் குறிப்பிடுவதாகும். அங்கு இங்கு எனாதபடி எங்கும் பரந்திருக்கும் ஆத்மா ஓட்டபாட்டமற்று அசைவற்றுத்தானே இருக்கும். ஒரு இடத்தில் மட்டும் இருப்பவன்தான் அசைய முடியும். தான் இல்லாத இடத்திற்குச் செல்லமுடியும். எங்குமிருக்கும் பரமாத்மாவுக்கு இல்லாத இடமேயில்லை. அது எப்படி அசையமுடியும்? எங்கு செல்லமுடியும்? ஆத்மா மனதைவிட வேகமானது உலகில் மனமே

அதிக வேகமுள்ளது. அதைவிட வேகமென்றால் மனதிற்கும் எட்டாதது என்றுதான் பொருள். தேவர்களும் அதை அறிந்தாரில்லை. இங்கே தேவர்கள் என்றால் இந்திரியங்கள் என்று பொருள். அது சீக்கிரம் செயல்படுகின்ற இந்திரியங்களைத் தாண்டி முன்னே சென்றுவிடுகிறது. இந்திரியங்கள் போகுமிடங்களி லெல்லாம் ஆத்மா காண்கிறது. இதைக்கொண்டு இந்திரியங்களுக்கு முன்னதாக வேகமாக அவைகளைத்தாண்டி ஆத்மா வந்துவிட்டதென்று கூறப்படுகிறது. தான் மாறுபடாமல் இருந்துகொண்டு, வாயுதேவனைக்கொண்டு உலகில் எல்லா செயல்களையும் நடைபெறச்செய்கின்றது ஆத்மாவே மூலாதாரம். அதன் ஸந்நிதியில் இருந்து கொண்டு, அதனிடம் சக்தியைப்பெற்றுக்கொண்டு மாதரிச்வன் அதாவது பிராணவாயு ஜீவர்களை ஆட்டிவைக்கின்றது.

**ஸுபோதர்:**—தந்தையே! ஒருவாறு புரிந்துகொண்டேன். ஆத்மா சலனமற்றது. மனதிற்கும் எட்டாதது. புலன்களையும் கடந்தது. ஓடும் பிறரைத்தான் எங்கும் இருந்தவாறே அது பின்தங்கச்செய்துவிடுகிறது. அதன் அருள் பெற்றே உயிர் ஆட்டிவைக்கிறது.

**ததீயங் ஆதர்வணர்:**—சபாஷ் ஸௌம்யனே! அடுத்த மந்திரத்தைக்கேள்.

तदेजति तन्नैजति तद् दूरे तद्वन्तिके।

तदन्तरस्य सर्वस्य तदु सर्वस्यास्य बाह्यतः ॥

ததேஜதி தந்நைஜதி தத்தூரே தத்வந்திகே।

ததந்தரஸ்ய ஸர்வஸ்ய தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத: ॥

(இருவரும் சொல்லுகின்றனர்)

அது சலிக்கிறது. சலியாமலுமிருக்கிறது. அது ஆத்ம ஞானமில்லாதவர்களுக்கு வெகு தூரத்திலும் ஞானிகளுக்கு, சமீபத்திலுமிருக்கிறது. அது இந்த எல்லாவற்றுக்கும் உள்ளேயும் வெளியிலுமிருக்கிறது.

**ஸுபோதர்:**—முந்தின சுலோகத்தின் விவரணம் தான் இதுவும். அது அசையும் பொருளாயும் அசையாப் பொருளாயும் இருக்கிறது. ஆத்மா சரீரம் முதலான உபாதிகளுடன் கலந்தே காணப்படுகிறது. சரீரம் அசைவதைக்கொண்டு ஆத்மாவையும் அசைவதாகச் சொல்லுகிறோம். உபாதி ஸம்பந்தமற்ற சுத்தமான ஆத்மா அசையாப்பொருள். ஞானிகளாகிற மெய்யர் களுக்கு மிக அருகிலும், அக்ஞானிகளாகிற பொய்யர் களுக்கு அதிக தூரத்திலும் இருக்கிறது. எல்லா வற்றிற்கும் அகத்தேயும் புறத்தேயும் இருப்பது ஆத்மா. நன்ருகப் புரிந்துகொண்டேன். தந்தையே மேலும் கூறுங்கள்.

**தத்யங் ஆதர்வணர்:**—ஆத்மாவை அறிவது அவ்வளவு சுலபமல்ல. ஆத்ம ஞானியின் லக்ஷணங்களைக் கூறு கிறேன். ஒப்பிட்டுப்பார்த்துக்கொள்.

यस्तु सर्वाणि भूतान्यात्मन्येवानुपश्यति ।
सर्वभूतेषु चात्मानं ततो न विजुगुप्सते ॥

யஸ்து ஸர்வாணி பூதானி ஆத்மன்யேவானுபச்யதி।
ஸர்வபூதேஷு சாத்மானம் ததோ ந விஜுகுப்ஸதே ॥

(இருவரும் கூறுகின்றனர்)

**தத்யங் ஆதர்வணர்:**—எவன் அனைத்தையும் ஆத்மாவினிடத்திலேயே பார்க்கிருனே, அனைத் திடத்தும் ஆத்மாவைப் பார்க்கிருனே, அவன் எதையும் வெறுப்பதில்லை. நமக்குப் பலவாருகத் தோன்றும் உலகப் பொருள்கள் எல்லாவற்றையும் அவன் ஆத்மாவாகக் காண்கிருன். அதாவது ஆத்மா வைக்காட்டிலும் வேருன பொருள் ஒன்றுகூட இருப்ப தாகவே அவன் காண்பதில்லை. இந்த சரீரத்திற்கு மட்டுமல்லாமல் எல்லாவற்றிற்கும் தன்னையே ஆத்மா வாகக் காண்கிருன். இவன் எதிலும் அருப்பதோ சலிப்பதோ இல்லை. தன்னைக்காட்டிலும் வேருன

பொருளில் குற்றம் கண்டால் இவை ஏற்படும். பரிசுத்தமான தன்னைத் தவிர வேறு ஒன்றையும் காணுதவனுக்கு எப்படி வெறுப்பு ஏற்படும்? மேலும் கூறுகிறேன். கேள்.

यस्मिन्सर्वाणि भूतान्यात्मैवाभूद्विजानतः ।
तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ॥

யஸ்மின் ஸர்வாணி பூதான்யாத்மைவாபூத் விஜானத: ।
தத்ர கோ மோஹ: க: சோக ஏகத்வமனுபச்யத: ॥

(இருவரும் சொல்லுகின்றனர்)

**தத்யங் ஆதர்வணர்:**—எப்போது இருக்கும் அனைத்தும் ஆத்மாவாகவே ஆய்விட்டதோ, அப்போது ஒற்றுமையைக் கண்ட அவனுக்கு மயக்கமேது? துக்கமேது? ஆத்ம ஞானி எப்படியிருப்பான் தெரியுமா? எவன் துன்பத்திலும் இன்பத்திலும் ஸமமாக இருக்கிறானே? விருப்பையும் வெறுப்பையும் ஒன்றாக கருதுகிறானே அவனே உண்மையான ஆத்மஞானி. எல்லாம் பரமாத்மாவின் ஸ்வரூபமாகையினால் ஒன்றையும் நிந்திக்கமாட்டான் அவன். அவனுக்கு ஸமதிருஷ்டி ஏற்பட்டு விட்டதால் அஞ்ஞானம், துக்கம் யாதும் அவனை நாடாது.

**ஸுபோதர்:**—தந்தையே, ஒப்பிட்டுப்பார்த்து அஜகஜாந்தர வித்தியாஸம் காண்கிறேன். தாங்கள் கூறும் ஒருமைக் காட்சியுள்ள சோக மோஹமற்ற ஞானி எங்கே? அடியேன் எங்கே? இன்னும் ஞானியின் குணகணங்களை விவரித்துச் சொல்லவேண்டும் ஸ்வாமீ!

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய், கவனமாகக்கேள் 'ஜுகுப்ஸா' – வெறுப்பு–இகழ்ச்சி எப்போது உண்டாகிறது? தன் அமைப்பிற்கும் விருப்பத்திற்கும் குணத்திற்கும் மாறுபாடாக வெளியில் – உலகில் – நடக்கும் போது அதற்கு எதிர்ப்பாக வருத்தம், வெறுப்பு, பகை முதலிய உணர்ச்சிகளில் ஏதாவதொன்று பிறக்கிறது.

அந்த அருவருப்பான உணர்ச்சியே ஜுகுப்ஸா என்று கூறப்படுகிறது. ஆகையால் இந்த உணர்ச்சியை நீக்கிவிட்டால், அவன் எங்கும் ஒற்றுமையைக் காண்கிறான். தன்னைவிட மாறானதொன்று இருக்கிறதென்ற எண்ணமே வெறுப்புக்கும் பயத்துக்கும் காரணமாகிறது. எங்கும் ஆத்மதத்வத்தைக் கண்டுவிட்டால் மற்றது மறைந்துவிட்டால் இந்த இகழ்ச்சியும் ஜுகுப்ஸையும் மறைந்துவிடுகிறது. அவனுக்கு எல்லா ஜீவராசிகளும் தன்னுடைய ஆத்மாவாகவே ஆகிவிட்டபிறகு எவ்வாறு மருட்சிக்கு உள்ளாவான்? எல்லா இடங்களிலும் ஒருமையைக்காணும் விஞ்ஞானியைத் துயரம் எவ்வாறு வந்தடையும்?

**ஸுபோதர்:**—குருநாதரே! தெரிந்துகொண்டேன். என் அறிவு திடப்படுவதாக ஆத்மாவைப்பற்றி மீண்டும் கூற வேண்டுகிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**— மிகவும் சந்தோஷம். மறுபடியும் சொல்லுகிறேன்.

**स पर्यगाच्छुक्रमकायमव्रणमस्नाविरꣳशुद्धमपापविद्धम् ।**
**कविर्मनीषी परिभूः स्वयंभूर्याथातथ्यतोऽर्थान्व्यदधाच्छा-**
**श्वतीभ्यः समाभ्यः ॥**

ஸ பர்யகாச்சுக்ரமகாயமவ்ரணமஸ்னாவிரகும் சுத்த-
மபாபவித்தம் ।
கவிர் மனீஷீ பரிபூ: ஸ்வயம்பூர் யாதாதத்யதோ
ऽர்த்தான் வ்யததாச்சாச்வதீப்ய: ஸமாப்ய: ॥

(இருவரும் சொல்லுகின்றனர்)

பதவுரை கூறுகிறேன் முதலில். அந்த ஆத்மா எங்கும் வ்யாபித்தவன். பிரகாசமானவன். சரீரம் இல்லாதவன், புண்படாதவன். நாடிகளில்லாதவன், சுத்தமானவன். பாபமற்றவன், எல்லாமறிந்தவன், மனதை ஆள்பவன், அனைத்தையும் கடந்தவன்,

தானகவே ஏற்பட்டவன், நித்தியர்களாயிருக்கும் பிரஜாபதிகளுக்கும் செய்யவேண்டிய காரியங்களைப் பகுத்துக்கொடுப்பவன்.

**ஸுபோதர்:—** தந்தையே! ஆத்மா ஸர்வ வியாபி, தேஜஸ் உள்ளவர் என்பதைப் புரிந்துகொண்டேன். காயமில்லை, புண் இல்லை, நரம்பில்லை முதலியவார்த்தைகளின் பொருளை விளக்கவேண்டும்.

**தத்யங் ஆதர்வணர்:—** வத்ஸா, அவன்-இந்த ஆத்மா எங்கும் நிறைந்து இருக்கிறன். பிரகாசமாயிருக்கிறன். அகாயம் என்றல் உடலற்றது, அதாவது லிங்கசரீர மற்றது என்று பொருள். புண் அற்றது, நரம்பு இல்லாதது என்றல் ஸ்தூல சரீரம் ஆத்மாவுக்கு இல்லை என்று அர்த்தம் பௌதிக சரீரத்தில்தானே புண் ஏற்பட முடியும். தேகமிருந்தால் தானே வியாதி வர முடியும். பரிசுத்தமானவன் அதாவது அவித்யை இல்லாதவன் என்றதால் காரண சரீரமுமில்லையென்றுகிறது. இதுவரை இது அல்ல என்ற எதிர்மறை மொழிகளால் சுட்டிக்காட்டப்பட்டது ஆத்மா. மேலே கவி முதலிய சொற்களால் ஒரு கோர்வையாக ஆத்மாவின் குணங்கள் காட்டப்படுகின்றன. கவி என்றல் க்ராந்த தர்சீ முக்காலமும் பார்க்கிறவன். ஆத்மாவே காண்பவன். காண்பதும் கேட்பதும் நுகருவதும், ருசிப்பதும், கண்களும் செவிகளும் நாசியும் நாக்கும் அல்ல. அதன் செயல்களை செய்விப்பவன் ஆத்மாவே. அதுபோலவே எல்லாவற்றையும் அறிவதும் ஆத்மாவே. வேறொரு பொருள் காரணமாகவும் தான் கார்யமாகவும் தோன்றுததால் ஆத்மா 'தான்தோன்றி ஸ்வயம்பூ' அது தானேயன்றி மற்றகாரணங்களால் ஏற்படாதது ஏவப்படாதது அதுவே முதல் காரணம். யாவற்றிற்கும் மேலாக இருப்பவன் தானே உண்டானவன். ஆத்மாவே ஸர்வக்ஞன். அதுவே உசிதமான கர்மம், பலன், ஸாதனம் இவைகளை அனுஸரித்து சாசுவதமாயிருக்கும் ஸம்வத்ஸரம் என்ற பிரஜாபதிகளுக்கு யோக்யதைக்குத் தக்கபடி

கர்மாக்களை வகுத்துக்கொடுக்கிறது. ஸ்ருஷ்டிகர்த்தாக்களுக்கு அவர்களின் முறைப்படி காரியங்களைப் பங்கிட்டுக்கொடுத்ததும் ஆத்மாவே. ஆகையினுல்தான் அதன் ஸத்திய பலத்தினுலேயே கிரஹங்களின் சலனம், பருவகாலங்களின் கிரமம் இயற்கையின் வேலை இவைகள் உலகமுழுவதும் கோடிக்கணக்கான வருஷங்களாக முறையாக நடந்துகொண்டு வருகின்றன. இப்படி நியமம் பிறழாது ஆட்டிவைக்கும் அதிகாரம், சக்தி, ஸாமர்த்தியம், ஆத்மாவைச் சேர்ந்ததுதான்.

**ஸுபோதர்:**—அப்பா, அதிசயமான பல தத்துவங்களை அறிந்துகொண்டேன் இன்று. தனிமையை நாடி, இதுபற்றிச் சிந்திக்க விழைகின்றேன். அனுமதி வேண்டுகிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—எனக்கும் ஔபாஸனத்துக்கு நேரமாய்விட்டது. இன்றயபாடம் இத்துடன் நிறுத்திக்கொள்ளுவோம். ஆன்மவிருத்தியில் தானே உழைத்துத்தான் முன்னேறவேண்டும். நன்ருக மனனம் செய்து சிந்தித்துப் பார்ப்பாயாக. (எழுந்திருக்கிருர்கள்)

(திரை விழுகிறது)

## காட்சி 3

(திரை விலக)

[முன் காட்சியைப்போல் பிதாவும் புத்திரனும் அமர்ந்து ஸம்பாஷணை செய்துகொண்டிருக்கின்றனர்.]

**ஸுபோதர்:**—பூஜ்யபிதாவே, நமஸ்காரம். எனக்கு ஒரு ஸந்தேஹம். ஞானமார்க்கம், பக்திமார்க்கம், கர்மமார்க்கம் என்று தாங்களே வித்வத் ஸதஸ்ஸுகளில் பேசக் கேட்டிருக்கிறேன். ஞானம், கர்மம் இரண்டையும்பற்றித்தானே எனக்கு இதுவரை உபதேசித்திருக்கிறீர்கள். உபாஸனையைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லையே. ஏன்?

**தத்யங் ஆதர்வணர்:**—வத்ஸா! ஸாதுவான கேள்வி தான். "விஹிதமான கர்மாவைச் செய்துகொண்டு நூறு ஆண்டுகள் வாழவேண்டும்" என்று நான் ஆரம்பத்தில் கூறினேனல்லவா. அதில் பக்தியுமடக்கம் தான்.

**ஸௌபோதர்:**—அப்படியானல் கர்மாவை மட்டும் செய்வது நலமா? உபாஸனை மாத்திரம் நல்ல பயன் தருமா? அல்லது இரண்டும் சேர்ந்து ஸமுச்சயமாகவே செய்யப்படவேண்டுமா?

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய் உபாஸனையில்லாமல் கர்மானுஷ்டானம் செய்தாலும், கர்மானுஷ்டானம் இல்லாமல் தெய்வபக்தி செய்தாலும் பயனில்லை. ஆகாசத்தில் பறக்கும் பறவைக்கு இரண்டு பக்கத்திலும் இறக்கைகள் வேண்டாமா? ஒரு சிறகை மட்டும் வைத்துக்கொண்டு உயரே பறக்கமுடியுமா? ஆகவே மோக்ஷ இச்சையுள்ளவன் முதலில் கர்மம், பக்தி இரண்டையும் விடக்கூடாது. இனி மந்திரத்துக்கு வருவோம். (இருவரும் சொல்லுகின்றனர்)

अन्धं तमः प्रविशन्ति येऽविद्यामुपासते ।
ततो भूय इव ते तमो य उ विद्यायाँ रताः ॥

அந்தம் தம: ப்ரவிசந்தி யேऽவித்யாமுபாஸதே ।
ததோ பூய இவ தே தமோ ய உ வித்யாயாம் ரதா: ॥

எவர்கள் அவித்யயை உபாஸிக்கிறார்களோ அவர்கள் காரிருளில் புகுகின்றனர். எவர்கள் வித்யை யில் மட்டும் ஆசை வைத்திருக்கிறார்களோ அவர்கள் இன்னும் அதிகமான இருளில் புகுகின்றவர்களைப்போ லாவர். குழந்தாய், இங்கே வித்யை என்பது உபாஸனை யையும் அவித்யை கர்மாவையும் குறிக்கிறது. எவர்கள் செய்யவேண்டிய கர்மாக்களை விட்டு தேவதைகளைப் பற்றிய உபாஸனா மார்க்கத்திலேயே ஆசை வைத் திருக்கிறார்களோ அவர்களும் அதிகமான இருளில்

அதாவது ஸம்ஸாரத்தில் பிரவேசிக்கிறார்கள். அது போலவே தேவதாஞானமில்லாமல் கர்மாவை மட்டும் அனுஷ்டிக்கிறவர்களும் இருளில் ஆழ்ந்துவிடுகிறார்கள்.

**ஸுபோதர்:**—கர்மமும் பக்தியும் தரும் பலன்களில் வித்யாஸம் உண்டா? ஸமுச்சயமாக அனுஷ்டிப்பதால் யாது நன்மை பயக்கும்?

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய்! பலன்களைக் கூறுகிறேன். கேள்.

अन्यदेवाहुर्विद्ययाऽन्यदाहुरविद्यया ।
इति शुश्रुम धीराणां ये नस्तद्विचचक्षिरे ॥

அந்யதேவாஹுர்வித்யயாऽந்யதாஹுரவித்யயா ।
இதி சுச்ரும தீராணாம் யே நஸ்தத்விசசக்ஷிரே ॥

(இருவரும் சொல்லுகின்றனர்)

வித்யையால் பெறப்படும் பலன் வேறு, அவித்யையால் பெறப்படும் பலன் வேறு என்று நமக்கு உண்மையை விளக்கிக்காட்டிய தீரர்களிடமிருந்து நாம் கேட்டிருக்கிறோம். இந்த உண்மை இப்பொழுது புதிதாக வெளியிடப்பட்டதல்ல. எத்தனையோ தலைமுறை தலைமுறையாக குரு சிஷ்ய பரம்பரையாக வந்து எல்லா ஆன்றோர்களாலும் அங்கீகரிக்கப்பட்டது.

**ஸுபோதர்:**—குருநாதரே, ஸமுச்சயமாக அனுஷ்டிப்பதின் பலனைக் கூற வேண்டுகிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—

विद्यां चाविद्यां च यस्तद्वेदोभयं सह ।
अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ॥

வித்யாம் சாவித்யாம் ச யஸ்தத்வேதோபயம் ஸஹ ।
அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாऽம்ருதமச்நுதே ॥

(இருவரும் சொல்லுகின்றனர்)

எவன் வித்யை, அவித்யை இரண்டையும் சேர்த்தே ஒரே புருஷன் அனுஷ்டிக்கவேண்டுமென்று தெரிந்து கொண்டு அவ்விதமே அனுஷ்டிக்கிறனே, அவன் அவித்யையினுல் சாவைத்தாண்டி வித்யையினுல் சாகாத் தன்மையை அடைகிருன் பக்தி கர்மா இவற்றினது கலவை மிகவும் அவசியம் என்று இந்த உபநிஷத் வற்புறுத்துகிறது. அவித்யையாகிய உலகில் வித்யை அன்றிச் செயல்புரிய முடியாது கிரமமாக அவன் முக்தியையும் அடைவான். அக்நிஹோத்ராதி விஹித கர்மாக்களைச் செய்து மரணத்தைத் தாண்டி, தேவதாஉபாஸனையால் தேவதாத்ம பாவத்தை அடைகிருன். வியவஹாரத்திலுள்ள ஞானம், கர்மம் இரண்டுமே இங்கே மரணம் எனப்படுகிறது. தேவதாத்ம பாவமே அமிருதம் எனக் குறிக்கப்பட்டது.

**ஸுபோதர்:**—தந்தையே, கர்மத்தின் முக்கியத்துவத்தையும் உபாஸனையின் அவசியத்தையும் அறிந்து கொண்டேன். உருவமுள்ள தேவனை உபாஸிப்பது சிறந்ததா? அல்லது உருவமில்லாததை உபாஸிப்பது நல்லதா? விளக்கமாகக் கூறவேண்டுகிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய், கூறுகிறேன். கவனமாகக் கேள். பக்தர்களிடையே உருவமற்றதும் உருவமுள்ளதுமான தெய்வத்தை வழிபடுவதைக்குறித்து தர்க்கங்கள் இன்று நேற்று ஏற்பட்டவையல்ல. எப்போதும் இந்த வாதங்கள் இருந்துவந்திருக்கின்றன. ஆகவே இதைப்பற்றி வேதம் தீர்மானமாகச் சொல்லுகிறது. கேட்பாயாக.

**अन्धं तमः प्रविशन्ति येऽसंभूतिमुपासते ।**
**ततो भूय इव ते तमो य उ संभूत्यां रताः ॥**

அந்தம் தம: ப்ரவிசந்தி யே஽ஸம்பூதி முபாஸதே ।
ததோ பூய இவ தே தமோ ய உ ஸம்பூத்யாம் ரதா: ॥

(இருவரும் கூறுகின்றனர்)

முதலில் பதவுரையைக் கேள். எவர்கள் அஸம்பூதியை உபாஸிக்கிருர்களோ அவர்கள் அந்தகாரத்தில் வீழ்கின்றனர். எவர்கள் ஸம்பூதியில் ஆசைவைத்தவர்களோ அவர்கள் இன்னும் இருண்ட காரிருளில் புகுகின்றவர் போலாவர்.

**ஸுபோதர்:**—ஸ்வாமீ! ஸம்பூதியென்று சொல்வது எதை குறிக்கிறது? அஸம்பூதி என்ருல் என்ன?

**தத்யங் ஆதர்வணர்:**— ஸம்பூதி – வெளிப்பட்டுத் துலங்குவது, கார்யபிரஹ்மம், அஸம்பூதி வெளிப்பட்டுத் துலங்காதது—காரணமான அவ்யாகிருதம் அஸம்பூதியை அதாவது மூலப்ரக்ருதியை மட்டுமோ, ஸம்பூதியை அதாவது காரியப்ரஹ்மமான ஹிரண்யகர்ப்பரை மட்டுமோ உபாஸிக்கிறவர்கள் இருளிலேயே மூழ்கிப்போகிருர்கள். ஆகவே இரண்டையும் சேர்த்தே வழிபடவேண்டும். ஒன்றையொன்று தாழ்ந்ததாக நிந்திக்ககூடாது.

अन्यदेवाहुः सम्भवादन्यदाहुरसंभवात् ।
इति शुश्रुम धीराणां ये नस्तद्विचचक्षिरे ॥

सम्भूतिं च विनाशं च यस्तद्वेदोभयं सह ।
विनाशेन मृत्युं तीर्त्वाऽसंभूत्याऽमृतमश्नुते ॥

அந்யதேவாஹு: ஸம்பவாதந்யதாஹுரஸம்பவாத் ।
இதி சுச்ரும தீராணும் யே நஸ் தத் விசசக்ஷிரே ॥
ஸம்பூதிம் ச விநாசம் ச யஸ் தத் விதோபயம் ஸஹ ।
விநாசேந ம்ருத்யும் தீர்த்வா (அ) ஸம்பூத்யாऽம்ருத-
மச்நுதே ॥

(இருவரும் கூறுகின்றனர்)

ஸம்பூதியை வழிபடுவதால் பெறப்படுவது வேறு. அஸம்பூதியை உபாஸிப்பதால் அடைவது வேறு என்று

நமக்கு உண்மையை விளக்கிய ஞானிகள் கூறக்கேட்டு இருக்கிறோம். ஆனால் எவன் இரண்டையும் சேர்த்து அறிகிறானோ அவனே உண்மை ஞானி. அவன் ஸம்பூதியால் சாவைத்தாண்டி அஸம்பூதியால் சாகாத்தன்மையை எய்துகிறான். உருவமற்றது உருவமுள்ளது இரண்டையும் வழிபடுபவன், உருவமுடையதை வழிபடுவதன் மூலம் மரணத்தைவென்று உருவமற்றதை வழிபடுவதன் மூலம், அமரத்துவத்தை அடைகிறான் இந்த மந்திரத்தினால் பக்தி ஞானம் இவற்றுக்கிடையிலுள்ள தர்க்கம் வீண் என்று நிரூபிக்கப்பட்டது. ஒன்று மற்றதைப்பூர்த்திசெய்கிறது. ஒன்று மற்றொன்றிற்கு முரணானதல்ல. பெயரும் உருவமுமுடைய கடவுளிடம் பக்தி பண்ணி, முடிவில் உயர்ந்த தியானத்தில் நிலைபெறவேண்டும் முடிவில் உருவமற்றதை தியானித்து ஸமாதியிலிருக்க முதலில் உருவமுள்ளதை வழிபடவேண்டும். பக்தி, ஞானம் இரண்டையும் விவேகத்துடன் ஒன்றுசேர்த்து அனுஷ்டிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். எவன் அப்படிச் சேர்த்து அறிகிறானோ அவன் ஸம்பூதியால் அனைச்வர்ய-அதர்ம காமாதி தோஷங்களாலுண்டான மிருத்யுவைத் தாண்டி, அஸம்பூதியால் ப்ரக்ருதிலயமென்னும் அமிருதத்தை அடைகிறான்.

**ஸ—போதர்:**—தந்தையே, தங்களுடைய அமிர்தவர்ஷத்தால்-திவ்ய உபதேசத்தால்-மிகுந்த நலன் அடைந்தேன். மேலும் நான் அறியவேண்டியதை உபதேசிக்க வேண்டுகிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—அனேகமாக இந்த உபநிஷத் நிறைவு பெற்றுவிட்டது. இனி துதிப்பாடல்களை பாடி சூரியபகவானை வணங்கி ஸமாப்தி செய்யவேண்டியது தான். கேட்டு நலன் பெற்றதாகக் கூறினாய். இதுவரை கேட்ட பாகங்களைச் சுருக்கமாகக் கூறு, பார்ப்போம்.

**ஸ—போதர்:**— என் அருமைப்பிதாவே, அது அடியேனுக்கு ஸாத்தியமாகுமா?

**நந்யங் ஆநர்வணர்:**—பழக்கத்தால் தானே சரியாக வரவேண்டும். "அப்பியாஸம் செய்வதை ஆசிரியனும் செய்யான்" என்பது பழமொழி. நான் ஆசீர்வதிக்கிறேன் நீ தைரியமாக மொழிவாயாக.

**ஸுபோதர்:**—ஸ்வாமி, கூறுகிறேன். (சிறிதுநேரம் யோசித்து எழுந்து 'அபிவாதயே' சொல்லி நமஸ்காரம் செய்கிறார்.) எங்கும் நீக்கமற-எல்லாப் பொருள்களிலும் உள்ளவன் ஈசுவரன் என உணரவேண்டும். பற்றுகளைத் துறந்து ஈசுவரார்ப்பணமாகக் கடமைகளைச் செய்து வாழ்தலே நல்வாழ்வாம். அதை மறந்து சோம்பேறிகளாக வாழ்வோர் இருளடைந்த நரகங்களுக்குச் செல்வர். அவர்களுடைய இஹலோக வாழ்க்கையே கொடிய நரகத்துக்கு ஒப்பானதே. ஆத்மா, மனமொழி இந்திரியங்களுக்கு எட்டாதது. உள்-வெளி, பக்கம்-தூரம் ஒன்று-பல என்ற பேதங்கள் ஆத்மாவை உணரும்போது மறைந்துவிடுகின்றன. அனைத்தையும் ஆத்மாவிலும், அனைத்திலும் ஆத்மாவையும் காண்பவனே உண்மை ஞானி. அவனால் எதில் வேற்றுமையைப் பார்க்கமுடியும்? அவன் எதை வெறுப்பான். அவனுக்கு மயக்கமேது? துன்பமேது? ஆத்மஞானமில்லாத கருமமும் உபாஸனையும் முக்திக்குப்பயன் படாது. கருமமும் பக்தியும் ஸமுச்சயமாக அனுஷ்டிக்கப்பட்டால் பேறு பெறலாம். இல்லாவிடில் அக்ஞான இருளில் அழுந்தவேண்டியதுதான். அதுபோலவே உருவமில்லாதமூலப்பிரகிருதியைமட்டும் உபாஸித்தலும் நாமரூபங்களுடன் கூடிய காரியப்ரஹ்மத்தைமட்டும் உபாஸித்தலும் பலன் தராது. இருளிலேயே மூழ்கவேண்டியதுதான். ஆனால் கர்மத்தையும் உபாஸனையையும் அதிலும் காரிய ப்ரஹ்ம உபாஸனையையும் ப்ரக்ருதி உபாஸனையையும், ஒருங்குசேர்த்துத்தக்க முறையில் ஸாதகன் அனுஷ்டித்தால் படிப்படியாய் அவன் முன்னேறுவான். இறுதியில் மோக்ஷமடைவான். அப்பா! நான் கூறியதில் தப்பிதமிருந்தால் மன்னிக்கவேண்டுகிறேன்.

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய், ரொம்ப நன்றாகச் சுருங்கசொல்லி விளக்கவைத்தாய். உன்னைப் புத்திரனாக வும் அதிலும் சிஷ்யனாகவும் அடைந்ததில் மிகவும் பெருமைப்படுகிறேன். இனி துதிப்பாடல்களைச் சொல்லு கிறேன் கேள். கூடவே பாடுவாய்.

**हिरण्मयेन पात्रेण सत्यस्यापिहितं मुखम् ।**
**तत्त्वं पूषन्नपावृणु सत्यधर्माय दृष्टये ॥**

ஹிரண்மயேன பாத்ரேண ஸத்யஸ்யாபிஹிதம் முகம் ।
தத் த்வம் பூஷன்னபாவ்ருணு ஸத்யதர்மாய
த்ருஷ்டயே ॥

**पूषन्नेकर्षे यम सूर्य प्राजापत्य व्यूह रश्मीन् समूह ।**
**तेजो यत्ते रूपं कल्याणतमं तत्ते पश्यामि योऽसावसौ**
**पुरुषः सोऽहमस्मि ॥**

பூஷன்-னேகர்ஷே யம ஸூர்ய ப்ராஜாபத்ய
வ்யூஹ ரச்மீன் ஸமூஹ !
தேஜோ யத்தே ரூபம் கல்யாணதமம் தத்தே பச்யாமி
யோऽஸாவஸௌ புருஷ: ஸோऽஹமஸ்மி ॥

ஹே சூரியதேவனே! எங்களை போஷித்துக்காப் பவனே! பொன்மயமானவட்டிலால் ஸத்தியத்தின் முகம் மறைக்கப்பட்டிருக்கிறது. ஸத்தியத்தை நாடும் என்னு டைய பார்வைக்கு நீ அந்தத் திரையை நீக்கியருள் வாயாக.

உலகை— இந்த விசுவத்தைப் - போஷிக்கும் ஆண்டவனே தனி வெளியில் சஞ்சரிப்பவனே, அனைத் தையும் நியமனப்படி அடக்கி ஆள்பவனே, சூரியனே, பிரம்மபுத்திரனே, உன் கிரணங்களைச் சுருக்கி உன் உள் ஒளியைக் காட்டுவாய் உன்னுடைய உத்தமமான மங்களவடிவத்தை நான் பார்க்கும்படி அருள்வாய். இந்த உன்னுடைய சூரியமண்டலத்தில் உறையும்புருஷனும் நானேதான்.

**ஸுபோதர்:**—தந்தையே, சூரியபகவானைக் குறித்து இவ்வளவு உருக்கமான பிரார்த்தனையை நான் கேட்டதே இல்லை. அவரே ஸர்வலோகங்களையும் போஷிக்கிருர். ஒரு விநாடியாவது சூரியன் இல்லாவிட்டால், இந்த உலகம் என்னுவது?

**தத்யங் ஆதர்வணர்:**—இந்தப் பிரார்த்தனையை மரணபடுக்கையில் இறந்துகொண்டிருக்கும் ஒருவன் செய்யும் பிரார்த்தனையாகச் சொல்லுகிருர்கள். மரணப் படுக்கையில் உள்ள ஒரு கிழவனின் துதியாக மட்டும் நினைக்கவேண்டாம். நான் எனும் அகந்தையே இங்கு மரிக்கும் தறுவாயில் இருப்பதாகக் கூறப்படுகிறது. முன் சொன்னபடி வாழ்க்கை நடத்தியவனின் அகங்காரம் கடைசியில் அவன் தியானத்திலிருக்கும்போது இறந்து போகவேண்டியதுதானே, அச்சமயம் அது புரியும் கடைசி பிரார்த்தனை இதுவாகும். எல்லைக்குட்பட்ட அறிவுக்குப்பின்னுல் உள்ள பூர்ணமான பரிசுத்தமான அறிவை அக்ஞானம் மறைத்துக்கொண்டு இருக்கிறது. அந்த உண்மையை-பிரஹ்மத்தை-அடையும் வழியில் ஜ்யோதிர்மயமாகிய மறைப்பு இருக்கிறது. ஸத்ய தர்மனுகிய நான் பார்க்கும் பொருட்டு-அந்த மார்க்கத்தில் செல்லும்பொருட்டு-திரையை விலக்கு அல்லது வழியைத் திறந்துவிடு. இந்த உருக்கமான பிரார்த்தனைக்கு இணங்கி திரை விலகியதும் நான் உம்முடைய சிறந்த உருவத்தைக் காண்கிறேன். கண்டதும் வியப்படைகிறேன். ஏனெனில் நான் அங்கே என்னையே கண்டு கொள்கிறேன். நானே அவர்! உள்ளே உள்ள புருஷன்.

**ஸுபோதர்:**—பிரஹ்மத்தை அறிந்தவன் பிரஹ்மமாகவே ஆகிருன். இந்த உண்மை அடிக்கடி உபநிஷதங்களில் சொல்லப்படுகிறது. மனிதனுல் பிரஹ்மத்தைக் காணமுடியாது. ஆனுல் அது அனுபவிக்க இயலாத இன்மைத் தன்மையல்ல. அது ஒரு உறுதியான ஸத்யம். அதை அனுபவிக்கவும் வாழவும் முடியும்.

ஆனால் மனிதனல்லன். பிரஹ்மத்தை அறிந்தவன் மனிதனல்ல. அவன் பிரஹ்மமேதான். அவன் தற்காலிகமாக - பிராரப்த கர்மாவினால் கிடைத்த மனித உடலுடன் நடமாடுகிறான். உண்மையில் அவன் பிரஹ்மமேதான். பிரஹ்மத்தை பிரஹ்மமானாலேயே அறிய முடியும்.

**தத்யங் ஆதர்வணர்:**—குழந்தாய், மற்ற இரண்டு துதிப்பாடல்களையும் கேள்.

**वायुरनिलममृतमथेदं भस्मान्तꣳशरीरम् ।**
**ओं क्रतो स्मर कृतꣳस्मर क्रतो स्मर कृतꣳस्मर ॥**

வாயுரநிலமம்ருதமதேதம் பஸ்மாந்தꣳ சரீரம் ।
ஓம் க்ரதோ ஸ்மரக்ருதꣳ ஸ்மர க்ரதோ ஸ்மர
க்ருதꣳ ஸ்மர ॥

**अग्ने नय सुपथा राये अस्मान् विश्वानि देव वयुनानि-**
**विद्वान् ।**
**युयोध्यस्मज्जुहुराणमेनो भूयिष्ठां ते नम उक्तिं विधेम ॥**

அக்நே நய ஸுபதாராயே அஸ்மான் விச்வானி
தேவ வயுனானி வித்வான் ।
யுயோத்யஸ்மஜ்ஜுஹுராணமேனோ பூயிஷ்ட்டாம்
தே நம உக்திம் விதேம ॥

(இருவரும் சொல்லுகின்றனர்)

மூச்சுக்காற்று வெளியிலுள்ள அழியாத வாயுவில் லயிக்கட்டும். பிறகு இந்த உடல் சாம்பலாக முடியட்டும். ஓங்காரஸ்வரூபியே, என்னை நினைப்பீர். என்னால் செய்யப்பட்டதை நினைப்பீர். ஸங்கல்ப ஸ்வரூபியே, என்னை நினைப்பீர். என்னால் செய்யப்பட்டதை நினைப்பீர். அக்நியே, வினையால் விளைந்த செல்வத்தை அனுபவிக்க நல்ல பாதையில் எங்களை அழைத்துச் செல்வீர். தேவனே, எல்லா எண்ணங்களையும் நீர் அறிவீர். மறைந்திருந்து கெடுக்கும் பாவத்தை நாசம் செய்வீர்.

நமஸ்கார வசனங்களை ஸமர்ப்பித்து உம்மைப் பூஜிக்கிறேம்.

ஸு-போதர்:—அப்பா! இந்தத் துதிகளும் மரணவஸ்தையிலிருக்கும் ஒருவன் சொல்லவேண்டியவைகள்தான். மரணமடைபவரின் பிராணன் ஸர்வாத்மகமாக இருக்கப்பட்ட பரந்த வெளிவாயுவை அடையவேண்டியதுதானே. மூச்சுப்போனபின் சரீரமும் பஸ்மாவாகப் போகவேண்டியதே. அப்பொழுது ஜீவாத்மா ஓங்காரத்தை ஸ்மரிக்கவேண்டும். ஏற்கனவே தன்னல் செய்யப்பட்டிருக்கும் வினைகளையும் ஸ்மரிக்கவேண்டும். அப்போது அக்னியாகிற பரதேவன் எல்லாவற்றையும் (ஸங்கல்பங்களையும் செயல்களையும்) அறிந்தவராதலால், பலானுபவத்தின் பொருட்டு நல்வழியில் நடத்திச் செல்லவேண்டும். அவர் எங்களுடைய பாபங்களையும் தொலைக்கவேண்டும். அவருக்கு எங்கள் சிறந்த நமஸ்காரங்கள் பல உரித்தாகுக. என்ன உயர்ந்த பிரார்த்தனை! மனதையும் மனிதனையும் கைதூக்கிவிடும் பிரார்த்தனை.

தத்யங் ஆதர்வணர்:—குழந்தாய், இந்த பிரார்த்தனைக்கு வேறுவிதமாகவும் பொருள் சொல்லலாம். கேள். "ஏ உறுதியான ஸங்கல்பமுள்ள ஜீவனே, ஈசுவரன் பெயரைச் சொல்லிக்கொண்டிரு. அவர் செயலை நினை. ஏ ஜீவனே, உன் ஸங்கல்பத்தை விட்டு அவர் செயலை நினை. ஏ மார்க்கபந்துவான ஒளியுடன் விளங்கும் அக்கியே, உலகில் எல்லாத் தத்துவங்களும் உமக்குத்தெரியும். எம்மை சுலபமான வழியில் பேரானந்தம் துய்க்க அழைத்துப்போம் கோணல்மாணலாகச் செல்லும் பாவத்தை அகற்றும். உம்மை மிகவும் பணிவாக மீண்டும் மீண்டும் வேண்டிக்கொள்கிறேம். மரணப் படுக்கையில் இருப்பதால் இப்பொழுது பணிவிடை ஒன்றும் செய்ய முடியாது, 'நமஸ்காரம்' என்ற வார்த்தையைத்தான் கூறமுடியும்.

**ஸாயோதர்:**—என் அருமைத் தந்தையே, உமக்குப் பல நமஸ்காரங்கள். இன்றும் என்றும் என்னை நல்வழியில் நடத்திச்செல்லும். மேலும் நான் நடக்கவேண்டியதற்கு உபதேசிக்கவேண்டும்.

**தத்யங் ஆதர்வணர்:**— வத்ஸா, உன் புத்தியையும் கிரஹிக்கும் சக்தியையும் மிகவும் மெச்சுகிறேன். என்னைவிட ஞானத்தில் நீ மிஞ்சிவிட்டாய். 'கற்கக் கசடறக் கற்றபின் நிற்க அதற்குத் தக' என்றபடி இந்த உபநிஷத் காட்டிய வழியில் வாழ்ந்து நலம் பெறுவாய். நலம் பெருக்குவாய். ஓம் ததாஸ்து. சாந்தி பாடம் சொல்லுவோம்.

ओं पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते ।
पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥

ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத்பூர்ண முதச்யதே ।
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவஸிஷ்யதே ॥

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

(திரை விழுகிறது)

மூன்றும் அங்கம் முற்றும்.

ஈசாவாஸ்யோபநிஷத் நாடகம் முற்றிற்று.

ஸ்ரீ குருப்யோ நம:

உபநிஷத் நாடகமாலா-2

# கேனோபநிஷத்

( நாடகம் )

## நாடக பாத்திரங்கள்

1. ஜைமினி:—ஒரு மஹரிஷி. இமயமலைச்சாரலில் ஸரஸ்வதீ நதிக்கரையில் ஆசிரமம் அமைத்துக்கொண்டு பக்குவம் அடைந்த சீடர்களுக்கு பிரஹ்மஞானத்தை உபதேசிப்பவர். பிரஹ்மநிஷ்டர். ஸாமவேதி.

2. தலவகாரர்
3. கௌதமர்
—பிர்ஹ்மசாரிகள்; குருகுலவாஸம் செய்து, ஞான உபதேசம் பெறும் சிஷ்யர்கள்.

4. உமாதேவி:—ஸ்ரீ பராசக்தி — ஸ்ரீ பரமேசுவரரின் பத்தினி.

5. யக்ஷன்:— ஒரு பயங்கரமான பூதம்.

6. இந்திரன்:— தேவர்களின் அரசன். அமராவதி காவலன்.

7. வாயு
8. அக்னி
—தேவர்கள்.

9. ஸூத்திரதாரன்:—நாடகத்தை அறிமுகம் செய்பவன்.

இன்னும் ஆசிரமவாஸிகள், தேவர்கள், மான்குட்டிகள், கன்றுகள், மயில்கள், குயில்கள், கிளிகள் முதலியன.

நிகழும் இடம்:—இமயமலைப் பிராந்தியம்.

# கேனோபநிஷத்

## (நாடகம்)

## முதலாவது அங்கம்

### காட்சி 1

[குருவந்தனம் திரைக்குள்ளே வாத்திய இசையுடன் நடக்கிறது அதற்குப்பின் ஸூத்திரதாரன் பிரவேசம்.]

श्रुतिस्मृतिपुराणानामलायं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

ச்ருதிஸ்ம்ருதிபுராணாம் ஆலயம் கருணாலயம் ।
நமாமி பகவத்பாத சங்கரம் லோகசங்கரம்

**ஸூத்திரதாரன்:—** மெய்யன்பர்களே! நமஸ்காரம். நாங்கள் நினைத்ததற்கு மேலாகவே பெரியோர்கள் குழுமி இருக்கிறார்கள். சரித்திர, புராண, இதிஹாஸ, ஸமூக ஸம்பந்தமான கதைகளைத்தான் மஹாஜனங்கள் ரஸிப்பார்கள்; வேதாந்த விஷயங்களில் சிரத்தை இராது என்றதப் பெண்ணம் அடியோடு மாய்க்கப் பட்டுவிட்டது.

அறிஞர்களே! நாங்கள் நடத்தும் இச்சிறு நாடகத்தைக்கண்டு களித்து எங்களுக்கு ஆசி வழங்குங்கள். மேன்மேலும் இத்தகைய பணியில் ஈடுபட உற்சாகம் ஊட்டுங்கள். இப்பிரபஞ்ச வாழ்க்கையில் நாம் எல்லோரும் இன்பம் தேடி அலைகிறோம். "சுகம் எங்கே? எதில்? எப்போது" என்றே ஒவ்வொரு ஜீவனும் ஓடிக்கொண்டிருக்கிறான். தன்னுடைய நிழலைத் தானே பிடிக்க முயலும் குழந்தையைப் போலே, முயற்சியில் படுதோல்வியுற்று ஏமாற்றம் அடைகிறோம்.

எல்லாம் அறிந்த ஞானவான்களே! உண்மையான இன்பம் பிரஹ்மத்தை அறிவதிலேயே இருக்கிறது. 'கெட்டுப்போன பிரஹ்மத்தை கேநத்தில் தேடு' என்பது பழமொழி. முக்கியமான பத்து உபநிஷத்துக்களிலும் மிகவும் சுருக்கமாக இருந்தாலும், பிரஹ்ம ஞானத்தை உள்ளங்கை நெல்லிக்கனியென காட்டித் தரவல்லது இந்த கேனோபநிஷத். ஆகையினால் ஸ்ரீ சிருங்ககிரி மஹா ஸன்னிதானத்தின் ஆசீர்வாதத்துடனும், தங்களுடைய அன்புடனும் இந்நாடகத்தைச் சமர்ப்பிக்கிறோம். குற்றம் நீக்கிக் குணம் நாடிக் குசலமாயிருக்க அருளவேண்டும்.

இதோ நாடகம் ஆரம்பமாகிறது திரை விலகுகிறது ஆம்! உங்கள் அஞ்ஞானத் திரையும்தான்— ஜாக்கிரதையுடன், விழிப்புடன், நன்கு கவனியுங்கள். லாபம் உங்களுக்கே!

[திரை தூக்கப்பட, ஆசிரமக் காட்சி தென்படுகிறது. இமயமலைச்சரிவில், ஸரஸ்வதி நதிக்கரையில் பெரிய ஆசிரமம். காலைநேரம். உள்ளே வேதகோஷங்கள் செவிக்கு விருந்தளிக்கின்றன. ஆசிரமவாசிகள் பரபரப்பு இல்லாமல் அங்கும் இங்கும் சென்று தங்கள் தங்கள் காரியங்களை கவனிக்கின்றனர். வெளியே ஒரு பெரிய ஆலமரத்தின் அடியில் ஜைமினி மஹரிஷி பத்மாஸனம் போட்டுக் கொண்டு, மான் தோலில் கம்பீரமாக வீற்றிருக்கிறார். அவருக்கு இருமருங்கிலும் சிஷ்யர்கள் நிற்கின்றனர். ஒருபுறத்தில் ஹோமம் நடக்கிறது. எங்கும் சாந்தி நிலவுகிறது. மயில் ஆட, கிளிப்பேச்சுத் தாளம் போட, கோகிலம் இன்னிசை பாடுகிறது. பாட்டில் மனதைப் பறிகொடுத்த மான்குட்டிகள், பசுங்கன்றுகள் வந்து தம்பக்கத்தில் நிற்பதைக் கவனிக்கவில்லை. வேதாந்த பாடம் கேட்டு நெட்டுருப்பண்ணிய ஒரு சுகம் தன் காதலிக்கு அதைச்சொல்லித்தருகிறது.]

(எல்லோரும் சேர்ந்து மங்களாசரணம் செய்கின்றனர்.)

"ஓம்! பிரஹ்மம் எம்மைக் (குருவையும் சீடர்களையும்) காத்து ரட்சிப்பதாக! நாம் பேரின்பத்தை நுகர

அருள்புரிவதாக! நாங்கள் சேர்ந்து ஒற்றுமையுடன் (பிரஹ்மத்தை அறிய) முயலுவோமாக! எமது கல்வி தேஜஸ்ஸுடன் விளங்குவதாக! நாம் எப்போதும் ஒருவருக்கொருவர் த்வேஷம் இல்லாமல் இருப்போமாக!

நாம், ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதைவிக அரிஷ்டங்களிலிருந்து விடுபட்டு சாந்தி அடைவோமாக அமைதியும் இன்பமும் மூவுலகத்திலும் பெருகட்டும்.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

ஓம்! என்னுடைய எல்லா அவயவங்களும், வாக்கு, பிராணன், கண், காது மற்றும் எல்லாப் புலன்களும், பலமும் நல்ல திறமையும் பெற்று இயங்குவனவாக. எல்லாம் உபநிஷத்தில் விளங்கும் பிரஹ்மமே. நான் பிரஹ்மத்தைவிட்டு நீங்கலாகாது. பிரஹ்மமும் என்னை விட்டு நீங்கலாகாது. அதை ஒருநாளும் நான் நிராகரித்தல்கூடாது. இந்த உறவு விடாது நிலைபெற வேண்டும். இந்த உறவு நீங்காது இருக்கவேண்டும். ஆத்மாவில் மகிழ்ந்து வாழ்பவரின் உபநிஷத் தருமங்கள் எல்லாம் என்னிடத்தில் நிலைபெறட்டும். அந்தத் தருமங்கள் என்னிடத்தில் நிலைபெற்று விளங்கவேண்டும்.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

[மங்களாசரணம் முடிந்தபின் சீடர்கள் குருவுக்கு "அபிவாதயே—அஸ்மி போ:" என்று வணக்கம் செலுத்துகிறார்கள். குருவும் அவர்களை, "தீர்க்காயுஷ்மான் பவ ஸௌம்ய" என்று ஆசீர்வதிக்கிறார். பின்பு குருவின் அனுமதியுடன் சீடர்கள் உட்காருகிறார்கள்.]

**ஜைமினி:—** குழந்தைகளே! உங்களுக்கு ஸகல மங்களங்களும் உண்டாகட்டும். பாடம் துவக்குவோம். வத்ஸா கௌதமா, முதல் பிரச்னம் நீயே கேள்.

**கௌதமர்:—** ஸ்வாமி, நேற்றையப் பாடங்களைச் சிந்தித்ததில் சரியாக விளங்கவில்லை. என் மனம்

எவனால் தூண்டப்பட்டு விஷயங்களில் பிரவேசிக்கிறது? எனக்கு இஷ்டமில்லாமலிருந்தாலும்கூட எவனாலோ விரும்பப்பட்டும் ஏவப்பட்டும் என் மனம் இயங்குகிறதே; அவன் யார்? எவனால் ஏவப்பட்டுப் பிராணன் தன் தொழிலை செய்கிறது. நான் அயர்ந்து தூங்கும் போதும் என் பிராணன் தன் வேலையை ஒழுங்காகச் செய்கிறதே! அதன் நியாமகன் யார்? எந்தத்தெய்வம் கண்ணையும் காதையும் ஏவுகிறது? எவனால் தூண்டப்பட்டு நாக்குப் பேசுகிறது? எவனால் உயிர்ப்பிக்கப்பட்ட வாக்குகளை நாம் பேசுகிறோம்? எவனால் தூண்டப்பட்டு ஜனங்கள் இம்மாதிரி பேசுகிறார்கள்? இப்போது நடக்கும் ஸம்பாஷணைக்குக் காரணம்தான் எவன்? எவனுடைய ஆக்ஞையால் ஏவப்பட்டு நாம் தொழில்படுகிறோம்? இதைக் கொஞ்சம் விவரமாக, விளக்கமாகக் கூற வேண்டுகிறேன்.

ஜைமினி:— அப்பா! குழந்தாய்! உன் பிரச்னம் ஸாதுவானது. நன்று, மிகவும் நன்று. சுருங்கச்சொல்லி விளங்கவைக்கிறேன், கேள்.

செவிக்குச்செவியாகவும், மனத்துக்கு மனதாகவும், சொல்லுக்குச் சொல்லாகவும், உள்ளதுவே, பிராணனுக்குப் பிராணனாயும், கண்ணுக்குக் கண்ணாகவும், இருக்கிறது. அதை அறிந்த தீரர்கள் எல்லாப்பற்றுக்களையும் இங்கேயே ஒழித்து, இந்த உலகத்தை விட்டு, அமரத்தன்மை எய்துகின்றனர்.

காதின் சக்திக்குக் காரண சைதன்யமாயும், மனசுக்கும் புத்திக்கும் வாக்குக்கும் நியாமகனாயும், இருப்பது பிரஹ்மமே. அதுவே கண்ணுக்குக் கண்ணாயும் பிராணனுக்குப் பிராணனாயும் நாக்குக்கு நாக்காகவும் விளங்குகிறது. அதுவே அவைகளைச் செயல்பட தூண்டுகிறது. கண் காது முதலிய அழியும் புலன்களில் ஆத்ம புத்தியை விட்டு—அந்த இந்திரியங்களின் உள்ளுறையும் நித்தியமான சைதன்யம் ஆத்மா

என்று கண்டவர்கள் மரணத்தை வெல்லுகிறார்கள்; சாகாத்தன்மையை அடைகின்றனர். அங்கே கண் எட்டாது; வாக்குச் செல்லாது. மனமும் போகமுடியாது. அதை நாம் உள்ளபடி அறியமாட்டோம். ஆகவே அதைப்பற்றி உபதேசிக்கவும் தெரியவில்லை. எங்கள் பூர்வாசார்யாளும், 'அது அறிந்த பொருளைவிட வேறு; அறியாத பொருளையும்விட அப்பாற்பட்டது' என்றுதான் சொல்லிப் போந்தார்கள். அது தன்னால் தானே விளங்கி நிற்கும். கண்ணால் பார்க்கமுடியாது. ஏனெனில் கண்ணுக்கு வெளி உருவங்களைக் காணும் சக்தியைக் கொடுப்பது அதுவேயல்லவா? அப்படியே தான் காதும் பிரஹ்மத்தினிடமிருந்து பிச்சை வாங்கித் தான் பிழைக்கிறது. அதுபோலவே ஏனைய எல்லா இந்திரியங்களும் பிரஹ்மத்தினிடமிருந்து சக்தி பெற்றுத் தான் இயங்குகின்றன. செயல்படுகின்றன. ஆகையினால் தான் அவைகளால் பிரஹ்மத்தை அறியமுடியவில்லை.

**தலவகாரர்:**—பூஜ்ய குருவே! விளங்குகிறது. மேலும் சொல்லுங்கள்.

**கௌதமர்:**—ஆனால் ஒரு ஸந்தேஹம், ஸ்வாமி! மனஸுக்குமா பிரஹ்மம் எட்டாது? மனம் வீர்யம் நிறைந்ததல்லவா! அது மற்ற இந்திரியங்களைவிடப் பன்மடங்கு சக்தியுள்ளதல்லவா!

**ஜைமினி:**—குழந்தாய்! அது மனதுக்கு எட்டாதது தான். பிரஹ்மம்தானே மனதுக்கு ஆக்ஞையிடும் அதிஷ்டான சக்தி. மனது ஜடம்தானே. அதனால் பிரஹ்மத்தை எப்படி அறியமுடியும்? மனஸ் ஸாம்ராஜ்யத்தின் மன்னன் பிரஹ்மம். இந்திரியங்கள் வேலையாட்கள். மனம் தளபதி. புத்தி மந்திரி. பிரஹ்மத்தின் ஆக்ஞையால்தான் புலன்கள் தொழில்படுகின்றன. ஆகையினால் புலன்களால் பிரஹ்மத்தைப் பார்க்க முடியாது. அறிய முடியாது.

**தலவகாரர்:**—அப்படியானால் பிரஹ்மத்தை அறிய வழியே கிடையாதா? அருளவேண்டும் ஸ்வாமி!

**ஜைமினி:**—பிரஹ்மத்தை ஒருவாறு ஸமாதியில்தான் அறிந்துகொள்ள முடியும். தர்க்கத்தினாலும் அதிகக்கல்வியினாலும் அறிய முடியாது. எதைச் சொல்லால் விளக்க முடியாதோ, ஆனால் எது சொல்லுக்கு விளக்கம் கொடுக்கிறதோ அதுவே பிரஹ்மம் என்று அறிவாயாக. எதை ஒருவன் மனத்தால் உணருவதில்லையோ, ஆனால் மனம் எதனால் உணரப்பெறுகிறதோ அதுவே பிரஹ்மம் என்று நீ உணர்ந்துக்கொள். எதைக் கண்ணால் பார்ப்பதில்லையோ, ஆனால் கண்களை எதனால் பார்க்கிறானோ, அதுவே பிரஹ்மம் என்று நீ அறி. எதைச் செவியால் கேட்பதில்லையோ, ஆனால் காது எதனால் கேட்பதாகிறதோ, அதுவே பிரஹ்மம் என்று நீ அறிந்துகொள். எதை நாசியால் முகர்வதில்லையோ, ஆனால் மூக்கு எதனால் முகருகிறதோ அதுவே பிரஹ்மம் என்று நீ அறிவாய் இதுபோலவே மற்ற இந்திரியங்களுக்கும் அறிந்துகொள்வாயாக. எதை இங்கே இது பிரஹ்மம்' என்று உபாஸிக்கிறார்களோ அது பிரஹ்மம் அன்று. எதை நீ அறிந்துவிட்டதாக எண்ணுகிறாயோ அது பிரஹ்மம் அன்று; ஏனெனில் நீ அறிந்ததாய் எண்ணியவுடன் அது உன் மனசுக்கும் புத்திக்கும் எட்டி விடுகிறதே! ஆகவே அது பிரஹ்மம் ஆக முடியாதே! ஆகையால் அது பிரஹ்மம் அன்று.

**கௌதமர்:**—தாங்கள் சொன்னவை எல்லாம் ரொம்ப ஆச்சரியமாக இருக்கின்றன ஸ்வாமி! பிரஹ்மம் அறியாத பொருள்களுக்கும் அப்பாற்பட்டது என்று சொன்னீர்களே, அறியாத பொருள்களைப்பற்றித் தெரிந்துகொள்ள முடியுமா?

**ஜைமினி:**— வத்ஸா! உன் கேள்வியிலிருந்து நீ மிகவும் கவனமாய்க் கேட்பது தெரிகிறது. அறியாத பொருள்களைப்பற்றியும் தெரிந்துக்கொள்ள முடியும்.

உதாஹரணமாக என் வயது உங்களுக்குத் தெரியாது. "வயது அறியோம்" என்று தெரியாத விஷயத்தை நீங்கள் அறிகிறீர்கள். அதுபோலவே அறியாத பொருள்களைப்பற்றியும் நாம் அறியமுடியும். அந்த ஞானத்துக்கும் அப்பாற்பட்டது தான் பிரஹ்மம். அது அறிந்த பொருள்களைவிட வேறு. நாம் அறிகிற நாமரூப குணமுள்ள பொருள்களை விட அது வேறு. அது உருவமும் அன்று ஆனால் அருவமும் அன்று. உருவமுடைய பொருள்களிலிருந்து வேறுபட்டது. ஆனால் அருவத்துக்கும் அப்பாற்பட்டது. அது வ்யக்தமும் இல்லை; அவ்யக்தமும் இல்லை. அறியமுடியாதது. அறிந்ததாக நினைத்திடில் அது பிரஹ்மம் அன்று. பிரஹ்மத்தை அறிந்துவிட்டதாக எண்ணுவதே பிசகு.

குழந்தைகளே! மாத்யான்ஹிக காலம் நெருங்கி விட்டது. அனுஷ்டானத்திற்குச் செல்வோம் வாருங்கள்

[சீடர்கள் எழுந்து குருவை வணங்குகிறார்கள். எல்லோரும் சேர்ந்து]

"ஸர்வம் பிரஹ்மமயம்—எல்லாம் பிரஹ்மமே
ஸத் சித் ஆனந்தம்—எல்லாம் இன்பமே
ஓம் பிரஹ்மம் ஓம் பிரஹ்மம் ஓம் பிரஹ்மம்!
ஓம் சாந்தி: ஓம் சாந்தி: ஓம் சாந்தி:"

(என்று பாடுகின்றனர்)—திரை விழுகிறது.

## காட்சி 2

(திரை தூக்கப்படுகிறது)

[ஆசிரமக் காட்சி:—ஆசிரமத்தின் மற்றொரு புறத்தில் ஜைமினி புலித்தோலின்மேல் வீராஸனத்தில் வீற்றிருக்கிறார். ஒரு பக்கத்தில் மான்குட்டி வந்து நிற்க அதற்குப் புல் எடுத்து ஊட்டுகிறார். மற்றொரு பக்கத்தில் பூனையும் கிளியும் உட்கார்ந்து விளையாடிக்கொண்டிருக்கின்றன. ஆசிரமத்தின் உள்ளிருந்து தோத்திரப் பாடல்களின் இன்னிசை, பசுநெய்யின் மணத்துடன் கலந்து வெளிவந்து எங்கும் பரவுகிறது.

**தில்வகாரர்:**—அப்படியானால் பிரஹ்மத்தை அறிய வழியே கிடையாதா? அருளவேண்டும் ஸ்வாமி!

**ஜைமினி:**—பிரஹ்மத்தை ஒருவாறு ஸமாதியில்தான் அறிந்துகொள்ள முடியும். தர்க்கத்தினாலும் அதிகக்கல்வியினாலும் அறிய முடியாது. எதைச் சொல்லால் விளக்க முடியாதோ, ஆனால் எது சொல்லுக்கு விளக்கம் கொடுக்கிறதோ அதுவே பிரஹ்மம் என்று அறிவாயாக. எதை ஒருவன் மனத்தால் உணருவதில்லையோ, ஆனால் மனம் எதனால் உணரப்பெறுகிறதோ அதுவே பிரஹ்மம் என்று நீ உணர்ந்துக்கொள். எதைக் கண்ணால் பார்ப்பதில்லையோ, ஆனால் கண்களை எதனால் பார்க்கிறானோ, அதுவே பிரஹ்மம் என்று நீ அறி. எதைச் செவியால் கேட்பதில்லையோ, ஆனால் காது எதனால் கேட்பதாகிறதோ, அதுவே பிரஹ்மம் என்று நீ அறிந்துகொள். எதை நாசியால் முகர்வதில்லையோ, ஆனால் மூக்கு எதனால் முகருகிறதோ அதுவே பிரஹ்மம் என்று நீ அறிவாய். இதுபோலவே மற்ற இந்திரியங்களுக்கும் அறிந்துகொள்வாயாக. எதை இங்கே இது பிரஹ்மம்' என்று உபாஸிக்கிறார்களோ அது பிரஹ்மம் அன்று. எதை நீ அறிந்துவிட்டதாக எண்ணுகிறாயோ அது பிரஹ்மம் அன்று; ஏனெனில் நீ அறிந்ததாய் எண்ணியவுடன் அது உன் மனசுக்கும் புத்திக்கும் எட்டி விடுகிறதே! ஆகவே அது பிரஹ்மம் ஆக முடியாதே! ஆகையால் அது பிரஹ்மம் அன்று.

**கௌதமர்:**—தாங்கள் சொன்னவை எல்லாம் ரொம்ப ஆச்சரியமாக இருக்கின்றன ஸ்வாமி! பிரஹ்மம் அறியாத பொருள்களுக்கும் அப்பாற்பட்டது என்று சொன்னீர்களே, அறியாத பொருள்களைப்பற்றித் தெரிந்துகொள்ள முடியுமா?

**ஜைமினி:**—வத்ஸா! உன் கேள்வியிலிருந்து நீ மிகவும் கவனமாய்க் கேட்பது தெரிகிறது. அறியாத பொருள்களைப்பற்றியும் தெரிந்துக்கொள்ள முடியும்.

உதாஹரணமாக என் வயது உங்களுக்குத் தெரியாது. "வயது அறியோம்" என்று தெரியாத விஷயத்தை நீங்கள் அறிகிறீர்கள். அதுபோல்வே அறியாதபொருள்களைப்பற்றியும் நாம் அறியமுடியும். அந்த ஞானத்துக்கும் அப்பாற்பட்டது தான் பிரஹ்மம். அது அறிந்த பொருள்களைவிட வேறு. நாம் அறிகிற நாமரூப குணமுள்ள பொருள்களை விட அது வேறு. அது உருவமும் அன்று ஆனால் அருவமும்அன்று. உருவமுடைய பொருள்களிலிருந்து வேறுபட்டது. ஆனால் அருவத்துக்கும் அப்பாற்பட்டது. அது வ்யக்தமும் இல்லை; அவ்யக்தமும் இல்லை. அறியமுடியாதது. அறிந்ததாக நினைத்திடில் அது பிரஹ்மம் அன்று. பிரஹ்மத்தை அறிந்துவிட்டதாக எண்ணுவதே பிசகு.

குழந்தைகளே! மாத்யான்ஹிக காலம் நெருங்கி விட்டது. அனுஷ்டானத்திற்குச் செல்வோம் வாருங்கள்

[சீடர்கள் எழுந்து குருவை வணங்குகிறார்கள். எல்லோரும் சேர்ந்து]

"ஸர்வம் பிரஹ்மமயம்—எல்லாம் பிரஹ்மமே
ஸத் சித் ஆனந்தம்—எல்லாம் இன்பமே
ஓம் பிரஹ்மம் ஓம் பிரஹ்மம் ஓம் பிரஹ்மம்!
ஓம் சாந்தி: ஓம் சாந்தி: ஓம் சாந்தி:"

(என்று பாடுகின்றனர்)—திரை விழுகிறது.

## காட்சி 2

(திரை தூக்கப்படுகிறது)

[ஆசிரமக் காட்சி:—ஆசிரமத்தின் மற்றொரு புறத்தில் ஜைமினி புலித்தோலின்மேல் வீராஸனத்தில் வீற்றிருக்கிறார். ஒரு பக்கத்தில் மான்குட்டி வந்து நிற்க அதற்குப் புல் எடுத்து ஊட்டுகிறார். மற்றொரு பக்கத்தில் பூனையும் கிளியும் உட்கார்ந்து விளையாடிக்கொண்டிருக்கின்றன. ஆசிரமத்தின் உள்ளிருந்து தோத்திரப் பாடல்களின் இன்னிசை, பசுநெய்யின் மணத்துடன் கலந்து வெளிவந்து எங்கும் பரவுகிறது.

*கௌதமர், தலவகாரர் இன்னும் சில சீடர்கள் பிரவேசித்து,*

**गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुर्गुरुर्देवो महेश्वरः ।**
**गुरुः साक्षात्परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः ॥**

"குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணுர் குருர் தேவோ
மஹேச்வர: ।
குரு: ஸாக்ஷாத் பரம் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம: ॥"

*என்று சொல்லிக்கொண்டு குருவை வணங்கி, ஸாஷ்டாங்கமாகத் தண்டன் ஸமர்ப்பிக்கிறார்கள். ஜைமினியும் ஆசீர்வாதம் செய்துவிட்டு எழுந்திருக்க எல்லோரும் சேர்ந்து.*

**ओं नमो ब्रह्मादिभ्यो ब्रह्मविद्या सम्प्रदायकर्तृभ्यो वंशऋषिभ्यो नमो गुरुभ्यः ।**
**यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै ।**
**तं ह देवमात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये ॥**

ओं शान्तिः शान्तिः शान्तिः ।

ஓம் நமோ ப்ரஹ்மாதிப்யோ ப்ரஹ்மவித்யாஸம்ப்ர தாய கர்த்ருப்யோ வம்சரிஷிப்யோ நமோ குருப்ய: ।

"யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்
யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை ।
தம் ஹ தேவ-மாத்ம-புத்தி-ப்ரகாசம்
முமுக்ஷுர் வை சரண மஹம் ப்ரபத்யே ॥"
ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

*[என்று மங்களாசரணம் செய்கின்றனர். எல்லோரும் தங்கள் தங்கள் இடங்களில் அமருகின்றனர்.*

**ஜைமினி:**—குழந்தைகளே! உங்களுக்கு வேதமாதா ஸகல கல்யாணகுணங்களையும் அருளுவாளாக. கௌதமா! முன்பு சிரவணம் செய்த விஷயங்களைப் பற்றிச் சிந்தனை செய்தாயா?

**கௌதமர்:**— ஸ்வாமி, எண்ணுந்தோறும் ப்ரஹ்ம சிந்தனை வியப்பை ஊட்டுகிறது. ஒரு சமயம் நன்ருய், தெள்ளத்தெளிய — தெரிந்ததுபோல் தோன்றுகிறது. அடுத்த கணத்திலேயே ஒன்றும் விளங்காமல்–மனத்துக்கும் அகப்படாமல்–ஓடிவிடுகிறது.

**தலவகாரர்:**— தங்கள் உபதேசங்களைக் கேட்டது முதல் அதையே நினைத்து மனனம் செய்துவந்தேன். நன்ருய் விளங்குகின்றன. ப்ரஹ்மத்தை நான் அறிந்துகொண்டேன்.

**ஜைமினி:**— சிஷ்யர்களே! துவக்கத்திலேயே உங்களை ஒன்று எச்சரிக்க விரும்புகிறேன். எல்லாம் அறிந்ததாய் எண்ணிவிடாதீர்கள். நீங்கள் தெரிந்துகொண்டதாய் எண்ணுவது மிகவும் சொல்பமே. தலவகாரா! வத்ஸா! நன்ருகத் தெரிந்துகொண்டேன் என்று நீ எண்ணுவதில் இந்த பிரஹ்மத்தின் எந்த ரூபத்தை (இங்கு) அறிந்திருக்கிருயோ அது அற்பம் என்பது நிச்சயம். இந்த ப்ரஹ்மத்தின் எந்த ரூபத்தைத் தேவதைகளிடம் அறிந்திருக்கிருயோ அதுவும் அப்படியே அற்பம்தான். ஆகையினுல் ப்ரஹ்மம் உனக்கு இன்னும் விசாரிக்கவேண்டிய நிலையிலேயே இருக்கிறது. மனனம் செய்து நன்ருக ஸாங்கோபாங்கமாகவிசாரித்து அறியவேண்டியதாகவே இருக்கிறது. இன்னும் நீ பூர்ணமாக அறிந்தபாடில்லை.

**தலவகாரர்:**—குருநாதா! எனக்கு ஒன்றும் தீர்மானமாகத் தெரியவில்லை. விதை ஊன்றிய தாங்களே மேலும் தண்ணீர் விட்டு வளர்க்கவேண்டும். தங்கள் உபதேசமாகிற அமிருத மழையினுல் வளம் அடைந்து ஞானக்கனியை நாங்கள் பெற அருளவேண்டும் ஸ்வாமி.

**ஜைமினி:**— ஓர் ஏழை நாட்டுப்புறத்தான், ராஜதானிக்குச் சென்றதும், அரசர் வாழும் அரண்மனைக்குப் போகிருன். அங்கே முன் வாசற் பூஞ்சோலையைக்

கண்டு மகிழ்வுற்று மாளிகையைக் கண்டதாக மயக்கம் அடைகிறான். தோரண வாயிலில் கண்ட அலங்காரங் களைப் பார்த்தே பிரமித்துவிடுகிறான். அரண்மனைக்கு உள்ளிருக்கும் செழிப்பையும் அணிகளையும் சுகபோகங் களையும் கேளிக்கைகளையும் அறிந்து பழகி உணர வேண்டுமேயல்லாது விவரித்துச் சொல்லமுடியாது. அது போலவேதான் பிரஹ்ம ஸாக்ஷாத்காரமும். முதல் பாடத்திலேயே அறிந்து விட்டதாய்ப்பிரமை தட்டும். அதில் கலங்கிவிடாதீர்கள். நம்பி மோசம் போகாமல் ஜாக்கிரதையாக இருந்து தொடர்ந்து ஆத்மவிசாரணை செய்யவேண்டும்.

**கௌதமர்:**—பூஜ்ய குருவே! கவனமாகவே கேட்டு வருகிறோம். மேலும் விஸ்தாரமாகவே சொல்லுங்கள்.

**ஜைமினி:**— வளருகின்ற ஒரு கொடி கதிரவனை நாடுவதுபோலவும், ஜலம் பள்ளத்தாக்கைப் பார்த்து ஓடுவதுபோலவும், மனிதனுடைய மனமும் பரம்பொரு ளையே நாடுகிறது. ஆனால் அந்த ப்ரஹ்மமோ இந்திரி யங்களால் அறியமுடியாதது. நாம் பிரமாணங்களால் தெரிந்துகொள்வது எல்லாம் பரோக்ஷப்ரஹ்மத்தைப் பற்றித்தான்.

**கௌதமர்:**—அப்படியானால் ப்ரஹ்மத்தை அப ரோக்ஷமாக அறிவது எப்படி? அதையே ஆரம்பத்தில் கற்பது நலம் அல்லவா?

**ஜைமினி:**—குழந்தாய் தலவகாரா, இந்தப்பூனைக்குக் குடிப்பதற்குக் கொஞ்சம் பால் கொண்டுவா.

(தலவாகாரர் உள் சென்று ஒரு தொன்னையில் கொஞ்சம் பாலுடன், வந்து பூனைக்குப் பக்கத்தில் வைக்கிறார். அந்தப் பூனையும் பாலைப்பருகக் குருவின் அனுமதியை எதிர்பார்க்கிறது).

**ஜைமினி:**—வத்ஸா, நான் பால் மட்டும்தானே கொண்டுவரச்சொன்னேன். தொன்னையை எதற்காகக் கொண்டுவந்தாய்? தொன்னையை நீக்கிவிட்டு பாலை மட்டும் கொண்டுவா.

தலவகாரர்:— (குழப்பத்துடனும் வியப்புடனும்) ஸ்வாமி, அது எப்படிச் சாத்தியமாகும்? தொன்னையில்லாமல் க்ஷீரம் எப்படிக் கொண்டுவரமுடியும்? பாத்திரம் இல்லாமல் பாலைக் .... கொண்டுவர ... முடியாதே.

ஜைமினி:—சரி போகட்டும்! ஹே மார்ஜாலமே! பாலைக் குடித்துவிட்டுக் கிளியுடன் சுகமாய் விளையாடு. வத்ஸா! தலவகாரா! எப்படிப் பாத்திரமில்லாமல் பாலை எடுக்கமுடியாதோ அது போலவே ப்ரஹ்மத்தையும் உங்கள் புத்தியில் கொண்டுவர-அறிவிக்க-ஒரு பாத்திரம் தேவை. அவைகள் தாம் முந்தின பாடங்களில் சொன்ன இந்திரியக் கூட்டங்கள் (கண்ணுக்குக் கண்ணாகவும் முதலியவை). ஸகுண ப்ரஹ்மமான தேவதா மூர்த்திகளும் அப்படியே தான் நிர்குணமான ப்ரஹ்மத்தைக் காட்டத் துணைபுரிகின்றன. ஆகையினால் அவைகளை அறிந்தவுடன், உண்மையை அறிந்துவிட்டதாகப் பெருமிதம் அடையாதீர்கள்.

தலவகாரர்:—பின் உண்மையை அறிவது எப்படி?

ஜைமினி:—நன்றாய் விசாரணை செய்தால் ஸமாதியில் தெரியும்.

[சிறிது நேரம் எல்லோரும் மௌனமாகத் தியானத்தில் இருக்கின்றனர். பிறகு பேச்சு மறுபடியும் ஆரம்பமாகிறது.]

தலவகாரர்:—இப்போது ப்ரஹ்மம் அறியப்பட்டது என்று நினைக்கிறேன். எப்படியென்றால் "நான் நன்றாகத் தெரிந்துகொண்டேன் என்று (இப்போது) நினைக்கவில்லை. அறியவில்லையென்றோ, அறிந்தேன் என்றோ எண்ணவில்லை. எங்களில் எவன் 'அறியவில்லையென்றோ' 'அறிந்தேன் என்றோ' எண்ணவில்லை என்று இதை உணர்ந்தவனோ அவன் தான் அதை (ப்ரஹ்மத்தை) உணர்ந்தவன்; நன்கு தெரிந்தவன். அது அறியாத பொருள்களுக்கும் அப்பாற்பட்டதென்றும், அறிந்த பொருள்களைவிட வேறு என்றும் நான் அறிகிறேன். ஆனால் அறியவுமில்லை.

கௌதமர்:—ஸ்வாமீ! என்னை அறியேன் நான்; என்னை அறிந்தேன் நான், என்று சொல்லுவது முன்னுக்குப் பின் முரண் அல்லவா? அது நகைப்புக்கும் இடம் அல்லவா!

ஜைமினி:—வத்ஸா! கௌதமா! அதில் நகைப்புக்கு இடம் எங்கேயிருக்கிறது. அறிபவன் அறியப்படுவது என இருபொருள் இன்மையால்-அனுபூதி உண்மையில் இரண்டும் அற்றதால்-தலவகாரர் கூற்று முற்றும் சரியே!

கௌதமர்:—குருநாதா! இன்னும் கொஞ்சம்கூட விளக்கமாக அருளவேண்டும்.

ஜைமினி:—"எனக்கு நன்றாகத் தெரியுமென்று நான் எண்ணவில்லை." நாமரூபங்கள் உள்ள பொருள்களை அறிவதுபோல் ப்ரஹ்மத்தைத் தெரிந்துகொள்ள முடியாது. இந்தக் கமண்டலம், ஜலபாத்திரம், மரவுரி முதலிய சாமான்களை அறிவதற்கும், ப்ரஹ்மத்தை அறிவதற்கும் வித்யாசம் உண்டு. ஜாதி, குணம், கிரியை, ஸம்க்ஞை முதலிய தர்மங்கள் இல்லாதது ப்ரஹ்மம் அகண்டமானது அது. சிறியது பெரியது, குட்டை நீளம், பிறப்பு இறப்பு, நிறம், உருவம், பெயர் முதலிய விகாரங்களும் குறிகளும் அதற்கு இல்லை. அதை அறிந்ததாய்ச் சொல்வது வீண் பிரமை. ஆகவே ப்ரஹ்மத்தை எனக்கு நன்றாகத்தெரியுமென்று எண்ணவில்லை. அது முற்றிலும் சரியே.

பிறகு அடுத்த வாக்கியத்துக்கு வருவோம். "மீண்டும் விசாரித்தபின் இப்போது அறியப்பட்டதென்று நினைக்கிறேன்" இதன் பொருள் என்னவென்றால், ஸமாதியில் ப்ரஹ்மத்தைத் தெளிவாக அறியமுடியும் என்பதுதான். ப்ரஹ்மத்தைப்பற்றித் தெரிந்துக்கொள்வது முடியாது. ஆனால் ப்ரஹ்மமாகத் தெரிந்துக்கொள்ளலாம். கடலிலுள்ள நீரைக் காய்ச்சி உப்பு எடுத்து அந்த உப்பாலேயே ஒரு பொம்மை செய்து ஒரு நூலில் பிணைத்து, கடலில் போட்டுக்

கொஞ்சம் கழித்து நூலை வெளியில் எடுத்தால் பொம்மை இருக்குமா? அதுபோலவே ஸமாதியில் ப்ரஹ்மத்துடன் இரண்டறக் கலந்து விட்டால் அதை வர்ணிக்க முடியுமா? பால் பாயஸம் நன்றாயிருக்கிறது என்று வால்மீகியைப் போன்ற மஹாகவி வந்து வர்ணித்தாலும், அந்த பாயஸத்தை உண்ட ருசி கிடைக்கப் பெறுமா? ஒவ்வொருவரும் தனித்தனியே தியான ஸமாதியில் அமர்ந்து அதை அனுபவிக்கவேண்டும். அப்போதுதான் அபரோக்ஷமாக ப்ரஹ்மஞானம் அடைவீர்கள்.

**தலவகாரர்:**—இந்த ப்ரஹ்மஞானத்தால் பெறும் பேறு என்னவோ? அதையும் விபரமாகக் கூற வேண்டும்.

**ஜைமினி:**—அந்த ப்ரஹ்மம் அமதம் (அறியப் படாதது) என்பது எவன் மதமோ (கொள்கையோ) அவனால் அது அறியப்பட்டதாம்; அறியப்பட்டது என்பது எவன் மதமோ அவன் அறியவில்லையாம். அறிவாளிகளுக்கு அது அறியப்படாதது. அறிவீனர்களால் அறியப்பட்டதாய்க் கருதப்படுவது. ஒவ்வொரு போதத்திலும் விளங்கும் அது, அறியப்படாமல் அறியும் வஸ்துவாக நிற்கிறது" என்பது முடிவான மதம் (கருத்து).

அதனால் அதை அப்படித்தெரிந்தவன் சாகாத் தன்மையை அடைகிறான். அமரத்வம் கிட்டுகிறது. ஆத்மாவிடமிருந்து உண்மையான வீரியத்தை அவன் பெறுகிறான். அந்த ப்ரஹ்ம வித்யையாலேயே சாகா நிலையை எய்துகிறான்; இங்கேயே (இப்போதே) ஒருவன் உண்மையை அறிந்தால் அவன் அழியாமல் இருக்கிறான். இங்கே அறியாவிட்டால் பெரும் அழிவு ஏற்படுகின்றது அவனுக்கு. பொருள்தோறும் ஆத்மாவை ஆராய்ந்து கண்டுகொண்ட தீரர்களே இவ்வுலகத்தை விட்டு அமரர்கள் ஆகின்றனர். இந்த ஆத்மாவைப் பலமில்லாதவன் அடையமுடியாது. உண்மையான

பலம் ஆத்ம பலம்தான். அந்த பலத்தாலேயே அமிருத நிலை ஏற்படும்.

அது உங்கள் பிறப்புரிமை. அதை உடனே நீங்கள் அடையலாம். அதை அறிந்தால் (என்ன இல்லா விட்டாலும்) நீங்கள் எல்லாம் பெற்றவர்கள்-உடைய வர்கள்-ஆகிறீர்கள். அதை இழந்துவிட்டால் (வேறு என்னவெல்லாம் பெற்றிருந்தபோதிலும்) பெரும் நஷ்டம் அடைவீர்கள். ஒன்றும் இல்லாதவராகவே கணிக்கப்படுவீர்கள். ஆகையினால் புத்திசாலிகள், இந்திரிய வாழ்க்கையை நீத்து, எல்லாப் பொருள்களிலும் ப்ரஹ்மத்தைக்கண்டு அமரத்வம் அடைகிறார்கள்.

**சிஷ்யர்கள்:—** (எல்லோரும் எழுந்து) குருநாதரே! தங்கள் உபதேசத்தால் நாங்கள் தன்யர்களானோம். அநேக கோடி நமஸ்காரம்.

(பிறகு எல்லோரும் சேர்ந்து பாடுகின்றனர்.)

"சிதானந்தரூபம், சிவோஹம், சிவோஹம்,
சுத்தம், பூர்ணபோதம் ஸாக்ஷாத்காரம்
பேதத்தை நீக்கு, பயத்தை ஒழி
ப்ரம்ஹத்தைச் சமாதியில் உணர்வாய்
அங்கே அடங்கித்துயில்வாய்
அபேதத்தில் ஆனந்தம் காணுவாய்
அக்ஞானம் விலகி இன்பம் அடைவாய்.
சிதானந்தரூபம், சிவோஹம், சிவோஹம்"

(திரை விழுகிறது.)

## காட்சி 3

[ஸ்ரீ ஜைமினி மகரிஷியின் ஆசிரமத்திலிருந்து கைலாஸத்திற்குப் போகும் வழி. அடர்ந்த காட்டினூடே போகும் கொடிவழியில் கௌதமரும், தலவகாரரும், பேசிக்கொண்டே நடந்து வருகின்றனர். அவர்கள் தலையிலும் தோள்களிலும் மூட்டைகள் வைத்திருக்கிறார்கள்.]

**கௌதமர்:—** நண்பரே, நாளை குலபதி கௌசிகர் அவர்கள் வருகிறார்கள். அவரை வரவேற்பதற்கு வேண்டிய ஸமித்து, தர்ப்பை முதலிய சாமான்கள் கொண்டுவர வந்தோம். நேரம் அதிகமாகிவிட்டதே! வழி தப்பி விட்டோமா?

**தலவகாரர்:—** இல்லை, நம் குருநாதர் சொன்ன வழியில்தான் நாம் போய்க்கொண்டு இருக்கிறோம். நாளைய விருந்துக்கு வேண்டிய அளவு கந்தமூல பலங்களையும் சேகரித்துவிட்டோம். இதோ அந்த ஸப்தஸால விருக்ஷங்கள். அவற்றைக் கடந்ததும் கடம்பவனம் வருகிறது.

**கௌதமர்:—** மித்ரரே! நினைவிருக்கிறது, அதற்குப் பக்கத்தில்தானே சென்ற வருஷம் வனபோஜனம் நடந்தது.

**தலவகாரர்:—** ஆமாம். அன்று எவ்வளவு இன்பமாக இருந்தது. நம் வாழ்க்கையிலேயே பொன் நாளாகக் கொண்டாடவேண்டிய நாள் அது. ஏனென்றால் அன்றையதினம் தேவகுரு பிருஹஸ்பதி பகவான் கூட வந்திருந்தாரல்லவா?

**கௌதமர்:—** ஆம் வந்திருந்தார்கள். நாம் எல்லோரும் அவர் பாதாரவிந்தங்களில் வணங்கி ஆசியும் பெற்றோம். எல்லாம் நம் ஆசார்யர் அவர்கள் அநுக்கிரஹந்தான்.

[திரைக்குப்பின் கோலாஹல சப்தம் கேட்கிறது "அமரர் வெல்க, அசுரர் ஒழிக. தேவேந்திரன் வெல்க—" என்ற கோஷங்களும் வாத்திய சப்தமும் கேட்கின்றன.]

**தலவகாரர் :—** நண்பரே! என்ன சப்தம் கேட்கிறது? இதோ பாரும் நம் ஆசிரமத்துக் குயில் பறந்து வருகிறது.

**கௌதமர்:—** சிநேகிதரே, இது நம் கோகிலம் தான். ஆகையினால் நாம் ஆசிரமத்தை நெருங்கிவிட்டோம்

என்பதும் சரியான வழியில் வந்துகொண்டிருக்கிறோம் என்பதும் நிச்சயம்.

[திரைக்குப்பின் சப்தம் அதிகமாகக் கேட்கிறது. இருவரும் பிரமித்து மூட்டைகளுடன் ஒரு பெரிய ஆலமரத்திற்குப் பின்னால் மறைந்து ஒரு பாறையின்மீது உட்கார்ந்து கொள்ளுகின்றனர். குயிலும் அந்த மரக்கிளையில் உட்காருகிறது.

தேவர்கள் மிகவும் உற்சாகத்துடன், அலங்கார உடைகள் அணிந்து, தேவதுந்துபி முழங்க, ஜயபேரிகைகள் கொட்ட, அணி வகுத்து, வருகின்றனர். தேவேந்திரன் கம்பீரமாக நடந்துவருகிறான். மேல் அணிந்திருக்கும் பட்டு உத்தரீயம் தென்றலில் கொடிபோல் பறக்கிறது. கற்பகத்தருவின் வாசமலர்கள் அவன் மேல் தூவப்பட்டுக்கீழே விழுகின்றன. எங்கும் நறுமணம் கமழ வெண் கொற்றக் குடை நிழல் காட்ட, சாமரங்கள் இருபுறமும் வீசப்படாநிற்க, அமராவதி காவலன் அசுரர்களை ஜயித்து அந்த வெற்றியில் மதிமயங்கி அகங்காரத்துடன் பவனி வருகிறான்.]

**கௌதமர்:**— (ஒரு புறமாக) நண்பரே! இது என்ன அமர்க்களம்.

**தலவகாரர்:**— ஸஹோதரரே! தேவர்கள் தேவாஸுரயுத்தத்தில் ஜயம் அடைந்துவிட்டார்கள். அதனால் மிகுந்த கர்வம் கொண்டு கோஷிக்கிறார்கள். வெற்றி பெற்றவர்கள் தம்மை மறப்பது இயற்கைதானே.

**கௌதமர்:**— ஆனாலும் தேவர்களுக்கு இவ்வளவு கர்வம் கூடாது. தனக்குத்தானே நிகர் என்று அல்லவா இந்திரன் நடக்கிறான். கடவுளைக்கூட மறந்து விட்டார்கள் போலும்! தேவர்கள் முகத்தில் தேஜஸுக்குப்பதிலாக ஆணவம் அல்லவா தாண்டவமாடுகிறது! அமரர் அகத்தில் ஆணவமா? நன்று! நன்று! இது எங்கே போய்முடியுமோ.

**தலவகாரர்:**— எல்லாம் சுபமாகத்தான் முடியும். கவலை வேண்டாம் உமக்கு! கொஞ்சம் பேசாதிரும். அவர்கள் ஏதோ கூறுகிறார்கள், கவனிப்போம்.

கௌதமர்:—ஆகட்டும் அப்படியே, நம் குயில்கூடப் பாடுவதை நிறுத்திவிட்டுக் கவனமாகக் கேட்கிறது பாரும்.

தேவர்கள்:—எங்கள் மன்னர் வாழ்க!

அக்னி:—எங்கள் வீரத்தோள்கள் வெற்றிபெற்றன. தேவேந்திரனுக்கு ஜே! வீரம் வெல்க!!

வாயு:— படைப்பலத்தால் பகைவரை முறியடித்தோம். பராக்கிரமம் வாழ்க. முகில் ஊர்தியின் மகுடம் மாண்புடன் ஓங்குக!

தேவேந்திரன்:— புஜபலத்தினல் புன்மையாளரைப் புறமுதுகிட்டு ஓடச்செய்தோம். வாழ்க எங்கள் வெற்றி! ஓங்குக தேவர் கொற்றம்!!

வாயு:—அமராவதி காவல! அசுரர்கள் பூண்டே அற்றுவிட்டது. அவர்களை வேரோடு களைந்து விட்டோம்.

அக்னி:— அதுமட்டுமா! வென்னீரையும் ஊற்றினேம். இனிமேல் நம் அரசர் தேவேந்திரன் பகை அற்று ஏக சக்ராதிபதியாய் மூவுலகத்தையும் ஆண்டு வருவார். வாழ்க அவர் நாமம்! வெல்க அவர் கொற்றம்! தேவேந்திரனுக்கு ஜே!

[எல்லோரும் கோஷமிடுகின்றனர். அந்தக்கோஷங்கள் அண்டங்களெல்லாம் நடுங்கும்படி பயங்கரமாகவும் மிகவும் உச்சஸ்தாயியிலும் இருக்கின்றன. ஆனல் அப்போது அங்கே ஒரு அற்புதம் நிகழ்கிறது. அந்த சப்தத்தையும் உள்ளடக்கும் பெரிய த்வனியுடன் ஒரு பயங்கரமான பூதம் (யக்ஷன்) தோன்றுகிறது. தேவர்கள் முன்னிலையில் தோன்றிய யக்ஷன் பூஜிக்கத்தகுந்தவனுய் விளங்கியும், தேவர்கள் மதியீனத்தால் அதை உணரவில்லை. யக்ஷன் பிரத்தியக்ஷமானவுடன் கௌதமரும் தலவகாரரும், பயந்து நடுநடுங்கி ஒருவரை ஒருவர் கட்டிக்கொள்ளுகின்றனர். முதலில் பீதியால் கண்களை

மூடிக்கொண்டு சற்று நேரம் கழிந்து சுய நிலையை அடைகின்றனர். குயிலும் பயந்து கதறிக்கொண்டு ஆசிரமத்தை நோக்கிப் பறக்கிறது.]

**தேவர்கள்:**—(அக்னிதேவனை நோக்கி) ஹே ஜாதவேதனே (தோன்றிய பொருள்கள் எல்லாவற்றையும் அறியும் ஆற்றல் படைத்தவனே), இந்த யக்ஷவடிவம் என்ன என்று அறிந்துவருவாயாக! இந்த சமயம் இது இந்த இடத்தில் ஆவிர்பவிக்கக் காரணம் என்ன? அசுர மாயையா? எல்லாம் சரியாகத் தெரிந்துவா!

**அக்னி:**—அமரர்களே! அப்படியே ஆகட்டும். இதோ ஒரு நொடியில் போய் (மாயமாலங்களை) அறிந்து வருகிறேன். (யக்ஷனை நோக்கிப் பெருமிதத்துடன் செல்கிறான்)

**யக்ஷன்:**—நீ யார்?

**அக்னி:**—நான் ஜாதவேதன்; அக்னியென்றும் சொல்வார்கள். தோன்றியதை எல்லாம் தோன்றியபடி அறியும் ஆற்றல் உள்ளவன் என பிரசித்திபெற்றவன்.

**யக்ஷன்:**—அப்படிப்பட்ட உன்னிடம் என்ன வீர்யம் உள்ளது? உன் சக்தியின் பரிணமம் என்ன? பரிமாணம் எவ்வளவு?

**அக்னி:**— (புன்னகையுடன்) சிறு பாலனைப்போல் கேள்வி கேட்கிறாயே! என் வீர்யத்தை அறியாதவர் உண்டோ? இந்த உலகில் உள்ளது எல்லாவற்றை யும் எரிக்கும் சக்தி என்னிடம் உள்ளது. எதையும் எப்பொருளையும் நான் எரித்துவிடுவேன்.

(யக்ஷன் ஒரு சிறு புல்லை எடுத்து முன்வைக்கிறது. காலைவேளை யானதால் அந்தப் புல்லின் நுனியில் ஒரு பனித்துளி வைரம்போல் பளிச்சென மின்னிக்கொண்டிருக்கிறது.)

**யக்ஷன்:**—ஹே அக்னி பகவானே! ஸகலத்தையும் எரிக்கும் திறமை உள்ளவனே, இந்தச் சிறு புல்லை எரிப்பாயாக!

(அக்னி மிக விரைவில் அதன்மேல் பாய்ந்தும் அதை எரிக்க முடியவில்லை.)

அக்னி:—(தனக்குள்) பிரளயகாலாக்னியின் உஷ்ணத்துடன் தாக்கியும் இந்தச்சிறு புல் எரியவில்லையே. என்னால் இந்தப்பூதம் என்னவென்று தெரிந்துகொள்ள முடியவில்லையே. அபஜயமே இல்லாத எனக்குத் தோல்வி வந்துவிட்டதே! அவமானம், வெட்கம். பயங்கரமான பூதத்தை நினைத்தாலே பீதியாக இருக்கிறது. என் அறிவும் மழுங்கிவிட்டது. ஜாதவேதன் என்ற என்னுடைய பிருது இன்று முதல் பொருளற்றதான வெறும் வெற்றுச்சொல்லாகிவிட்டது. நம் அரசரிடம் செல்லுவேன். அமராவதி காவலனிடம் சென்று அடைக்கலம் புகுவேன்.

(அக்னி தோல்வியுற்று தலைகவிழ்ந்து கொண்டு தேவர்கள்பக்கம் ஓடி வருகிறான். தேவேந்திரன் அவனை அணைத்துக்கொண்டு ஆச்வாசப்படுத்துகிறான்.)

தலவகாரர்:—(ஒரு புறமாக) கௌதமரே, பார்த்தீரா ஒரு விந்தையை. இந்த அக்னியினால் அந்தப்புல்லில் உள்ள பனித்துளியைக்கூட உலர்த்த முடியவில்லையே!

கௌதமர்:—ஆம் நண்பரே, இது மிகுந்த அற்புதம் தான். அக்னிக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும்!

தேவர்கள்:— அக்னியே, நடந்தது என்ன. ஏன் இப்படி அலங்கோலமாக ஓடிவருகிறாய்?

அக்னி:— என்னால் அந்த யக்ஷ வடிவம் என்ன என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. அது என் முன்னால் வைத்த சிறு துரும்பையும்கூட என்னால் எரிக்க முடியவில்லை. நான் பராஜயம் அடைந்து விட்டேன். மேல் யோசித்து ஆவன செய்யுங்கள்.

**தேவர்கள்:**—வாயுவே! நீர் சென்று இதன் உண்மையைத் தெரிந்துவாரும். நீர் போகாத இடம் இல்லை. புகாத புலன்கள் இல்லை. தெரியாத விஷயமும் இராது. ஆகவே கொஞ்சம் தயவுபண்ணிப் போய் வாரும்.

**வாயு:**— அங்ஙனமே ஆகட்டும். இதோ ஒரு நிமிஷத்தில் சென்று அறிந்து வருவேன். வெற்றியுடன் வருவேன். கவலை வேண்டாம்.

(வாயுதேவன் அந்த யக்ஷனை நோக்கி ஓடிவருகிறான்)

**யக்ஷன்:**— (வாயுவை நோக்கி) நீ யார்? எங்கு வந்தாய்?

**வாயு:**—ஹே பயங்கரப் பூதமே! நான் வாயுதேவன். மாதரிச்வா எனப் பிரசித்திபெற்றவன். ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவன்.

**யக்ஷன்:**— அப்படியா, வெகு சந்தோஷம். உன் வரவு நல்வரவு ஆகுக! அப்படிப்பட்ட உன்னிடம் என்ன வீர்யம்—சக்தி—உள்ளது? உள்ளபடியே உரைப்பாய்! முன்வந்த அக்னியைப்போல் முடியாத காரியத்தைச் சொல்லி, வீணாகக் கஷ்டப்படாதே!

**வாயு:**—உலகில் எது உண்டோ, அது எல்லாவற்றையும் நான் தூக்கக்கூடும். அவைகளைத் தூக்கி எறிவேன். மலைகளை எடுத்து மறிப்பேன். தூக்கி வீசுவேன். இமயத்தையும் மேருவையும் பந்தாடுவேன். என்னால் உனக்கு என்ன உதவி வேண்டுமோ தயங்காமல் கேள்! செய்கிறேன்.

**யக்ஷன்:**—வந்தனம். விசேஷமாக ஒன்றும் செய்ய வேண்டாம். இந்த சிறு புல்லைத் தூக்கு. அது போதும்.

**வாயு:**—இது என்ன பிரமாதம்! உன் மூர்த்தியின் அளவுக்கு மூளையில்லாமல் போய்விட்டதே உனக்கு. என்ன பரிதாபம்?

யக்ஷன்:— வாயுதேவா! பரிகாசம் பின்னல். முதலில் வேலையைக் கவனி.

(வாயு ஊழிக்காற்ருக — பிரசண்டமான வேகத்துடன் அந்தப் புல்லின்மேல் பாய்ந்தும் அதை அசைக்கவும் முடியவில்லை.)

கௌதமர்:— (ஒரு புறமாக) நண்பரே! பார்த்தீரா! அந்தத் துரும்பு நகரவேயில்லை. மேருவைப் பந்தாடிய வாயுதேவனுக்கு அது அசைந்து கொடுக்கவேயில்லையே! இது என்ன ஆச்சரியம்!

தலவகாரர்:—சகோதரரே! இதில் அதிசயம் ஒன்றும் இல்லை. அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது. இது தெரியாதா உமக்கு!

கௌதமர்:—வாஸ்தவம். இந்தப்பனித்துளி மஹா விஷ்ணுவின் மார்பில் கௌஸ்துபமணிபோல் பச்சைப் புல்லில் இன்னும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறதே!

வாயு:—(தனக்குள்) இந்த அற்புதமான சக்திவாய்ந்த பூதத்தைப்பற்றி என்னல் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லையே. எனக்கும் படுதோல்விதான். நினைக்க நினைக்க எனக்கு பயமாக இருக்கிறது. அதோடு லஜ்ஜை வேறு. திரும்பிவிடுவோம். (தேவேந்திரனிடம் ஓடி வருகிருன்.) "அமரர்கள் ஏறே, அடைக்கலம் தருவாய். அசுர குலாந்தகா! அபயம் அருள்வாய். அந்த யக்ஷன் யார் என்றே, அதன் செய்கை என்ன என்றே என்னல் அறிய முடியவில்லை. நம் ஸஹோதரன் அக்னியைப்போல் நானும் தோல்வி யுற்றுத் திரும்பி விட்டேன். மேல் ஆகவேண்டிய காரியங்கள், தேவர்களால் சிந்தித்துச் செய்யப்பட வேண்டும்.

(அமரர்கள் எல்லோருமாகக் கொஞ்சநேரம் ஆலோசனை செய்கின்றனர். மந்திராலோசனை முடிந்ததும்)

**தேவர்கள்:**—(தேவேந்திரனைப் பார்த்து) எங்கள் பேரரசே! இப்போது அசுரரை வென்று வெற்றிவிழாக் கொண்டாடும் வேளையில்-பூஜை வேளையில் கரடி நுழைந்ததுபோல், இந்த யக்ஷன் குறுக்கிட்டிருக்கிறான். இது அசுரமாயையா? அல்லது சுக்கிராச்சாரியாரின் சூழ்ச்சியா என்று கூட நம்மால் அறியமுடியவில்லை. எந்த ஆபத்திலும் தாங்களே எங்களுக்கு வழிகாட்டி, வெற்றிப் பாதையில் நடத்திச் செல்லுகிறீர்கள். இப்போதும் இந்த உண்மையைக் கண்டறிந்து வேண்டியது செய்யவேண்டும் புருஹூதா! போய்வரவேணும்.

**தேவேந்திரன்:**—அமரர்காள்! அச்சம் வேண்டாம். கவலையை ஒழியுங்கள். நான் இந்த க்ஷணமே போய் இதன் உண்மையை அறிய முயற்சிக்கிறேன்.

**வாயுவும், அக்னியும்:**—அமராவதி காவல! தாங்கள் மிகவும் ஜாக்கிரதையாக நடந்துகொள்ளவேண்டும் அந்தப்பூதம் பீமமானது. பீகரமானது. பீஷ்மமான சக்தியை உடையது. ஸர்வ ஜாக்கிரதையுடன் போக வேண்டும் ஸ்வாமி!

**தேவேந்திரன்:**— அங்ஙனமே ஆகுக. விழிப்புடன் செல்லுவேன். என்றால் இயன்றபடி முயற்சி செய்து உண்மைகாண முயல்வேன்.

(தேவேந்திரன் அதை நோக்கித் கர்வமின்றி நிதானமாகச் செல்லுகிறான். அங்கிருந்த பூதம் (யக்ஷ வடிவம்) உடனே மறைந்து விட்டது எல்லோரும் ஆச்சரியத்தில் மூழ்கி நிற்கின்றனர்.)

**தேவர்கள்:**— மகவன், தாங்கள் திரும்பிவிடுங்கள். அந்தப் பயங்கர யக்ஷன் மறைந்துவிட்டான். ஸ்வர்க்கம் செல்லுவோம்.

**அக்னி:**— அமரேந்திரரே! தங்களைப் பார்த்துப் பயந்து பூதம் ஓடிவிட்டது. திரும்புங்கள் போவோம்.

விருந்துக்கு நேரமாகிறது. அதிதிகள் வந்து காத்திருப்பார்கள். போவோம்.

**வாயு:—** ஸஹஸ்ராக்ஷரே, திரும்பிப்போவோம் வாருங்கள். பேடி போல் — எதிர்நிற்கமுடியாமல் — மறைந்துபோன பூதத்தைத்தேடி மேலும் செல்ல வேண்டாம். நடன கேளிக்கைகள் ஆரம்பமாகவேண்டும் ஊர்வசி, ரம்பை, திலோத்தமை முதலான எல்லோரும் தங்கள் வரவுக்கு ஏங்கிக்கிடக்கின்றனர். அவர்களுக்கு ஏமாற்றம் அளிக்கலாகாது. உடனே போவோம்.

**தேவேந்திரன்:—**தேவர்களே! நீங்கள் சொல்லுவது சரியல்ல. நான் முன்வைத்த காலைப் பின் வைக்க மாட்டேன். நீங்கள் வேண்டுமானால் போங்கள். நான் இதன் உண்மையை அறியாமல் வரமாட்டேன். இன்னும் அருகில் போய் கிட்ட நெருங்கி—நன்ருய்க் கூர்ந்து கவனித்து வருவேன். இதில் ஏதோ சூக்ஷ்மம் இருக்கிறது.

(தேவேந்திரன் வணக்கத்துடன் ஆனல் கம்பீரமாக, யக்ஷன் நின்றிருந்த இடத்தை நெருங்குகிறன். அப்போது அங்கேயே—ஆகாயத்தில் இமவான் புத்திரியும் மிகுந்த அழகால் பிரகாசிப்பவளுமான உமாதேவி பிரத்யக்ஷமாகிருள். ஸகலவிதமான அலங்காரங்களுடன், உருக்கிய தங்கம்போல் ஒளிவிடும் மேனியவளாய் உமாதேவி பிரகாசிக்கிருள், உமாதேவி தோன்றியதும், அந்த தேஜஸ்ஸின் ஒளியைத் தாங்க முடியாமல் தலவகாரரும்; கௌதமரும் மூர்ச்சையாகிக் கீழே விழுகின்றனர். தேவேந்திரன் மட்டும் அருகில் சென்று ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து விண்ணப்பம் செய்து கொள்கிருன்.)

**தேவேந்திரன்:—** கோமளவல்லித்தாயே! கோடி நமஸ்காரம்.

"ஈசுவரி, மஹேசுவரி பாஹி மாம்
மாதேசுவரி ராஜேசுவரி ரக்ஷ மாம்
உமாதேவி மஹாதேவி பாஹி மாம்

வித்யாதேவி துர்காதேவி ரக்ஷ மாம்
பயஹாரிணி பவதாரிணி பாஹி மாம்
ஸர்வகாரணி தயாபூரணி ரக்ஷ மாம்"

(என்று பாடி வணங்குகிறான்)

ஜகதம்பிகே! அடியேனைக் காத்தருள்வாய். இப்போது மறைந்த யக்ஷ வடிவம் யார்? அது எதற்காகத் தோன்றியது? இப்போது மறையவேண்டிய காரணம் என்ன? அக்னியும் வாயுவும் தோல்வி அடையக் காரணம் என்ன?

(மறுபடியும் பாதாரவிந்தங்களில் விழுந்து வணங்குகிறான்.)

உமாதேவி:— குழந்தாய், இந்திரா! எழுந்திரு. எல்லாம் உனக்கு விளக்கமாகக் கூறுகிறேன்.

"இந்த யக்ஷவடிவம் அந்தப் பிரஹ்மமேயாகும். தேவாசுர யுத்தத்தில், பிரஹ்மம் தேவர்களுக்காக ஜயித்தது. இந்த விஜயம் பிரஸித்தமாயிருந்தும் ப்ரஹ்மத்தின் அந்த விஜயத்தில் தேவர்கள் பெருமிதம் எய்தினர். பிரஹ்மத்தை மறந்து, "இந்த விஜயம் எங்களுடையது. இந்தப் பெருமை எங்களுடையது" என்று அஞ்ஞானத்தில் மூழ்கிக் கோஷமிட்டீர்கள். உங்களுடைய அந்தத் தவறான எண்ணத்தை ப்ரஹ்மம் உணர்ந்து உங்களிடையில் யக்ஷ வடிவமாகத் தோன்றியது. தோன்றியும் நீங்கள் அதன் மஹிமையை உணரவில்லை. ஸ்ரீபரமேச்வரனுடைய யோக மஹிமையால் தோற்றுவிக்கப்பட்ட அந்த அற்புதமான வடிவம் பூஜிக்கத் தகுந்ததாய் விளங்கியும் தேவர்கள் மந்த புத்தியால் அதை உணரவில்லை. பிரஹ்மத்தின் முன்னிலையில் அக்னியும் வாயுவும் சக்தி இழந்தது நியாயமே.

தேவேந்திரன்:— ஹே ஜகத் ஜனனி! எனக்கு அஹங்காரம் அறவே ஒழிந்துவிட்டது. அன்னை பராசக்தியே! அருள் செய்வாய் அம்மா! அபராதங்களையெல்லாம் பொறுத்துக்கொண்டு கருணை புரிவாய்.

உமாதேவி:— தேவேந்திரா, உன் பக்திக்கு மெச்சினேம். பிரஹ்மஞானமே சிறந்த ஞானம். அபேதத்தால் பயத்தை ஒழிப்பாய். நீங்கள் அடைந்த விஜயம் ப்ரஹ்மத்தால் உண்டானதே. அந்த ப்ரஹ்மத்தின் விஜயத்தில் தான் நீங்கள் பெருமை கொள்ள வேண்டும். தற்பெருமை கொள்வது அறிவீனம். அந்தப் பிரஹ்மம் 'தத்வனம்' என்று பெயர் பெற்றது. அதைத்தெரிந்து, தீமைகளை ஒழித்து எல்லையில்லாத உயர்ந்த ஸ்வர்கலோகத்தில் மற்ற தேவர்களுடன் நிலை பெற்றிருப்பாயாக. உனக்கு ஸர்வ மங்களங்களும் உண்டாகும்.

(உமாதேவி அந்தர்த்தானமாகிருள். தேவேந்திரன் சந்தோஷமாகத் திரும்புகிறன். தேவர்களிடம் வந்து விபரங்களை விளக்கமாகச் சொல்லுகிறன்)

தேவர்கள்:— (பரபரப்புடன்) எங்கள் அரசே! தாங்கள் சுகமாய் — சந்தோஷமாய் — வந்தது கண்டு மகிழ்ச்சி. ஸ்ரீ உமாதேவியின் அருளால் நாம் தன்யர்களானேம்.

தேவேந்திரன்:— தேவர்களே! ஆணவம் வேண்டாம். அஹங்காரத்தை விடுவோம். அன்னையை மறவோம். என்றும் பிரம்மத்தியானத்தில் இருப்போம். வேத மாதாவின் கருணையே கருணை. "குபுத்ரோ ஜாயேத, க்வசிதபி குமாதா நபவதி" என்றபடி அகிலாண்டேச்வரி உமாதேவி—ஹைமவதி—என்றும் நமக்கு இரங்குவாள். ஆசீர்வதிப்பாள். அவளைப் போற்றி வணங்குவோம்.

ईश्वरि महेश्वरि रक्ष माम् ।
मातेश्वरि राजेश्वरि पाहि माम् ॥

"ஈசுவரி மஹேசுவரி ரக்ஷ மாம்
மாதேசுவரி ராஜேசுவரி பாஹி மாம்"

(எல்லோரும் சேர்ந்து பாடுகிறார்கள்)

(திரை விழுகிறது)

## காட்சி 4

[திரை தூக்கப்பட, சென்ற காட்சி நடைபெற்ற அதே இடத்தில், தலவகாரரும், கௌதமரும் மூர்ச்சை தெளிந்து எழுந்து உட்காருகின்றனர்.]

**தலவகாரர்:—** கௌதமரே! நாம் பார்த்ததும் கேட்டதும் வியப்பினும் வியப்பல்லவா! ஒரே அதிசயம் தான்! மனதுக்கு எவ்வளவு சாந்தி ஏற்பட்டிருக்கிறது.

**கௌதமர்:—** ஆமாம், நண்பரே! யக்ஷனின் அந்த அற்புத வடிவத்தை எண்ணி எண்ணி எனக்கு இப்போதும் மஹத்தான வியப்பு உண்டாகிறது. மேலும் மேலும் நினைத்து ஆனந்தமும் அடைகிறேன்.

**தலவகாரர்:—** ஆம்; பல யோகிகளும், முனிவர்களும் கூடக் காணமுடியாத தரிசனம் நமக்குக் குருவின் அருளால் கிடைத்தது. குருநாதர் இருக்கும் திசை நோக்கித் தெண்டன் ஸமர்ப்பிப்போம்.

[இருவரும் ஆசிரமம் இருக்கும் திக்கு — ஒளி பெறும் அழகுத் தூபம் ஆகாயத்தை நோக்கி உயரும் திசை நோக்கிக் கைகூப்பி வணங்குகிறார்கள். அதேசமயம் அங்கு ஜைமினிமகரிஷி, ஆசிரமவாசிகள், சிஷ்யர்கள், மயில்கள், மான்கள், கிள்ளைகள், குயில்கள் புடைசூழ அங்கே எழுந்தருளுகிறார். சீடர்கள் இருவரும் எழுந்து ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்கிறார்கள். குருவும் ஆசீர்வாதம் செய்து அணைத்துக்கொள்கிறார். எல்லோரும் பெரிய வட விருக்ஷத்தின் அடியில் உட்காருகின்றனர்.]

**மகரிஷி:—** குழந்தைகளே! நீங்கள் வரத் தாமதமானவுடன் ஆசிரமவாஸிகள் எல்லோரும் கலவரம் அடைந்துவிட்டார்கள். அவர்களை சமாதானம் செய்வதற்குள் நம்முடைய குயிலும் அங்கு வந்துசேர்ந்தது. உடனே எல்லோருமாகப் புறப்பட்டு வந்தோம்.

**மற்ற சிஷ்யர்கள்:—** நண்பர்களே! உங்களைக்காணாமல் நம் அருமைத் தாயார் (குரு பத்னி) மிகவும் கவலைப்பட்

டார்கள். பிறகு குருநாதரின் வாக்குகளால் சாந்தி அடைந்தார்கள்.

ஜைமினி:—வத்ஸா கௌதம! குழந்தாய் தலவகாரா! நீங்கள் பாக்கியசாலிகள். நான் சொன்ன உபதேசங்களுக்கு விளக்கம் போன்றவை இப்போது நீங்கள் கண்டதும் கேட்டதும். அந்த யக்ஷவடிவம் பரப்ரஹ்மம் என்று நீங்கள் தெரிந்துகொண்டிருப்பீர்கள். வாயு செல்வச் செருக்கின் அதிஷ்டானம். கல்விச் செருக்கின் இருப்பிடம் அக்னி (ஜாதவேதன்-எல்லாம் அறிவேன் என்ற அஹங்காரம்) இந்திரன்-என்பவன்-மனதுக்குத் தேவன்.

கௌதமர்:— ஒரு கதைபோல் இருந்ததில் எவ்வளவு தத்துவம் அடங்கியிருக்கிறது.

ஜைமினி:—பரப்ரஹ்மத்தினிடம் சென்ற வாயுவுக்கும் அக்னிக்கும் அவமானம் கிடைத்ததில் ஆச்சரியம் இல்லை. ஆணவத்துடன் சென்றனர். யார் என்று அறியப்போனவர்கள் அந்தக் கேள்விகூடக் கேட்க முடியாமல் ஊமையாயினர். யக்ஷன் அவர்களை நோக்கி 'நீங்கள் யாவீர்' என்று கேட்டபின் தான் அவர்களால் பேசவே முடிந்தது.

தலவகாரர்:—ஆமாம் ஸ்வாமி. யக்ஷன் ஸன்னிதானத்தில் சிறு துரும்பையும் அசைக்க முடியவில்லையே அவர்களால்.

கௌதமர்:— எந்த ப்ரஹ்மத்தால் தூண்டப்பட்டு நாக்குப்பேசுகிறதோ, வாக்குகள் உயிர்ப்பிக்கப்படுகின்றனவோ, அந்த ப்ரஹ்மத்தின் முன்னிலையில் அவர்களால் செயலாற்ற முடியாமல் போனது சரிதானே.

ஜைமினி:— நீங்கள் சொல்வது சரி, தேவேந்திரன்-மனஸ்தத்துவம்-உண்மையை அறிய, அஹங்காரத்தை விட்டு மமகாரத்தை மாற்றி, விவேகத்துடனும் வைராக்

யத்துடனும் கிட்டினான். அவனுக்குக் கருணைசெய்ய வேதமாதா இரங்கினாள். ஸ்ரீ உமாதேவி ஆவிர்ப்பவித்தாள்.

**சிஷ்யர்கள் இருவரும்:**— அப்போதுதான் நாங்கள் மூர்ச்சை அடைந்தோம். ஸ்வாமி, அதற்குப்பின் நடந்த விவரங்களை எல்லாம் தாங்கள் ஞானதிருஷ்டியால் அறிந்து சொல்லவேண்டும்.

**ஜைமினி:**— என் பிரிய சிஷ்யர்களே! கேளுங்கள், விளக்கமாகக் கூறுகிறேன். ஹைமவதி இந்திரனைப் பார்த்து "தேவாஸுர யுத்தத்தில் ஜயித்தது ப்ரஹ்மம். அதில் தேவர்கள் தாங்கள் ஜயம் பெற்றதாய்க் கர்வம் கொண்டார்கள். அந்த அறியாமையை நீக்கித் தேவர்களுக்குப் பாடம் புகட்ட, ப்ரஹ்மமே யக்ஷவடிவு கொண்டுவந்தது. தேவேந்திரா! நீ பெருமையை விட்டு, புலன்களை அடக்கி, மலங்களை நீக்கி, மாசு அகற்றி, வாசனைகளை எடுத்து தியானத்தில் அமர்ந்து ப்ரஹ்மத்தை அறிவாய்" என்று உபதேசித்தாள்.

**கௌதமர்:**— குருநாதரே, பிறகு......?

**ஜைமினி:**— அதன் பின்னரே அதுப்ரஹ்மம் என்று இந்திரன் அறிந்துகொண்டான். எக்காரணத்தால் அக்னியும், வாயுவும், இந்திரனும் இந்தப் பிரஹ்மத்தினிடம் நெருங்கிச்சென்று கண்டார்களோ - மேலும் இதை ப்ரஹ்மம் என்று முதன்மையாகத் தெரிந்துகொண்டார்களோ - அக்காரணத்தால் இந்தத் தேவர்கள் மற்றத் தேவர்களைவிடச் சிறந்தவர்களாயினர்.

**தலவகாரர்:**— இந்த அமரர்கள் மேலும் மேலும் முதன்மை பெற்று விளங்கட்டும்.

**ஜைமினி:**—இந்திரன் இதை நெருங்கி உமாதேவியின் உபதேசத்தால் இதை ப்ரஹ்மம் என்று முதன்மையாக அறிந்துகொண்டான். அதனால் இந்திரன் மற்ற தேவர்களைவிடச் சிரேஷ்டமானவன் ஆயினன்; சிறக்

தவன் ஆயினன். அதைப்பற்றிய உபதேசம் இது:— இந்தப் பிரஹ்மம் மின்னல் வெளிச்சம் போன்றதாம். இமைகொட்டுதல் போன்றதாம். இருண்ட மேகத்தினிடை மின்னலைப்போல் உள்ளத்தினுள்ளே தியானிக்கும்போது தோன்றி மறைவதாம். இது அதிதைவதம். மின்னல் தோன்றி நிலைத்திருப்பது ஒருகண நேரமாயினும், நல்ல பிரகாசமாயும் தெளிவாகவும் எங்கும் பரந்தும் காணப்படுவதுபோல ப்ரஹ்மமும் தோற்றம் அளிக்கும். ஒரு கலைப்பொழுதாயினும் கலக்கமின்றிக் காணமுடியும். கண் இமை கொட்டுவது எவ்வளவும் பிரயாசை இல்லாமல் தன்னிச்சையில்லாமல் நிகழ்கிறதோ, அதுபோலவே ப்ரஹ்மமும் தோன்றி மறையும். நிர்விகல்ப ஸமாதியில்—தியானத்தில்—ஒருவிதப் பிரயாசையுமின்றி விளக்கம் பெற முடியும். இந்த விதமாகத்தான் ப்ரஹ்மம் தேவதைகளில் பிரகாசிக்கிறது.

**கௌதமர்:**— தாங்கள் முன் உபதேசித்த "இந்த ப்ரஹ்மத்தின் எந்த ரூபத்தைத் தேவதைகளிடம் அறிந்திருக்கிறாயோ, அதுவும் மிக அற்பம்—ஸ்வல்பம்"—என்ற வாக்கியத்தின் தத்துவத்தை இப்போது சரியாகப் புரிந்துகொண்டேன் ஸ்வாமி.

**ஜைமினி:**— இப்படிப்பட்ட பிரஹ்மத்தை மனம் சென்றடைவதுபோலவும், பிரஹ்மத்தை மனம் வெளிப்படுத்துவதுபோலவும், இம்மனதைக்கொண்டு ஸாதகன் அடிக்கடி அருகில் நெருங்கி இதை ஸ்மரிப்பதுபோலவும், மனதில் ஸங்கல்பமேற்படும் பொழுதும் ப்ரஹ்மத்தை அறிவதுபோலவும் தோன்றுகிறது. அதாவது ப்ரஹ்மம் மனதிற்கு எட்டாததாயிருந்தாலும் மனதில் ஏற்படும் ஸங்கல்பம், நினைவு முதலான விருத்திகளைக்கொண்டு ஒருவாறு ப்ரஹ்மத்தைப் புரிந்துக்கொள்ளலாம். இது அத்யாத்மமான உபதேசம்.

**தலவகாரர்:—** மனதுக்கு மனதாயும், அதற்கும் எட்டாததாயும் இருக்கும் ப்ரஹ்மம், ஸகல பிராணிகளுக்கும் பிரத்யகாத்மாவாயிருப்பதால், அத்யாத்மம் என்று சொல்லுவது பொருத்தமேயாகும்.

**ஜைமினி:—** அந்த ப்ரஹ்மம் 'தத்வனம்' என்னும் பெயர் பெற்றது. எல்லோராலும் பஜிக்கத் தகுந்தது, பூஜிக்கத்தக்கது என்பது தத்வனம் என்ற பதத்தின் பொருள். எவனொருவன் அதை இப்படி தியானிக்கிறானோ அவனை எல்லாப் பிராணிகளும் விரும்புகின்றன. வாஞ்சையுடன் நேசிக்கின்றன.

**கௌதமர்:—** எல்லோருக்கும் அந்தராத்ம ஸ்வரூபமாய் விளங்கும் ப்ரஹ்மத்தைத் தத்வனம் என்று உபாஸனை செய்வதும் ஞானத்தை அடையும் மார்க்கமேயாகும்.

**ஜைமினி:—** பரப்ரஹ்மத்தின் இரகசியத்தை (தெரிந்தமட்டிலும்) தெளிவாகக் கூறினேன். இனி இந்த ஞானத்தையடைய உபாயங்களைக் கூறுகிறேன். தவம் அடக்கம், கர்மம் என்பவை அந்த ப்ரஹ்மவித்யையின் பாதங்கள். காலை ஊன்றி மனிதன் நிற்பதுபோல இவைகளிருந்தால்தான் ப்ரஹ்மவித்யை நிலைத்து இருக்கும். வேதங்கள் மற்ற எல்லா அங்கங்களுமாகும். ஸத்தியம் அதன் உறைவிடம். எவன் இதை இவ்வாறு அறிகிறானோ அவன் தீமைகளையெல்லாம் அறவே ஒழித்து, எல்லையில்லாததும், உயர்ந்ததுமான, ஸ்வர்க்கலோகத்தில் (ஆனந்தரூபமான ப்ரஹ்மத்தில்) நிலை பெறுகிறான்.

**சிஷ்யர்கள்:—** ஸ்வாமி, தாங்கள் அன்புடனும் ஆதரவுடனும் உபதேசித்தபடி அடக்கத்துடனும், பக்தியுடனும் தவம்செய்தும், சிரவணமனன நிதித்தியாஸனங்கள் செய்தும் ப்ரஹ்மத்தை அறிய முயலுகிறோம். எவர்களிடத்தில் சூதும், பொய்யும், வஞ்சனையும் இல்லையோ

அவர்களிடம் இது உறைகின்றதால் அப்படி வாழ்க்கை நடத்த முயற்சி செய்கிறோம். அம்முயற்சியில் தங்களுடைய ஆசியால் வெற்றியும் பெறுவோம்.

**ஜைமினி:**—எனது பிரிய சீடர்களே! ஸ்ரீ உமாதேவி தேவேந்திரனுக்குச் சொன்னதும், நான் உங்களுக்கு உபதேசித்ததும் பரோக்ஷமான ஞானமேயாகும். இனி இந்தப் பிரஹ்மத்தைப்பற்றி அபரோக்ஷமான ஞானத்தைப் பெற்றுப் பிரஹ்மமாகவே ஆகும் பேற்றை உங்களுக்கு வேத மாதா கருணை கூர்ந்து அளிப்பாள். உங்களுக்கு என்னுடைய பரிபூர்ண ஆசீர்வாதம். ஸர்வ மங்களங்களும் உண்டாகட்டும்.

[சிஷ்யர்கள் எல்லோரும் எழுந்து குருநாதரை வணங்குகிறார்கள். குருவும் தனித்தனியாக ஆசீர்வாதம் செய்கிறார். பிற்பாடு எல்லோரும் சேர்ந்து]

"ஓம் எங்களுடைய அங்கங்களும், வாக்கு, பிராணன், கண், காது முதலிய இந்திரியங்களும் திறனுக விளங்கட்டும. ப்ரஹ்மம் ஒரு நாளும் எம்மை விட்டு நீங்கலாகாது. நாங்களும் ப்ரஹ்மத்தை விட்டு விலகலாகாது. இந்த உறவுவிடாமல் நிலைபெற்று விளங்கட்டும். ஆத்மாவில் மகிழ்ந்துவாழ்பவர்களிடம் உள்ள உபநிஷத் தர்மங்கள் எல்லாம் எங்களிடத்தில் விளங்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்."

**ஜைமினி:**—குழந்தைகளே, நேரமாகிறது. ஆசிரமத்திற்குப் போவோம் வாருங்கள். ஓம் தத்ஸத்.

(எல்லோரும் போகின்றனர்.)

**ஸூத்ரதாரன்:**— (பிரவேசித்து) பெரியோர்களே! அனேக கோடி நமஸ்காரம். இவ்வளவு நேரம் பொறுமையுடனும் விழிப்புடனும் இருந்து இச்சிறு நாடகத்தைக் கண்டு எங்களுக்கு உற்சாக மூட்டியதற்கு எங்கள் மனமார்ந்த நன்றி. காதுகளால் நல்லதைக் கேட்கவேண்டும் கண்களால் நல்லதையே காணவேண்டும். எப்படிப் பெ

ருக்கெடுத்து ஓடும் ஆறுகள் நாமரூபங்களை இழந்து ஸமுத்திரத்துடன் ஒன்றுபட்டு இரண்டறக் கலக்கின்றனவோ அப்படியே, நாமும் பிரஹ்மத்தை அறிந்து பிரஹ்மமாகவே ஆகவேண்டும். பாவத்தை ஒழித்து, சோகத்தைத் தாண்டி, உயர்ந்த நிலையை அடையவேண்டும். அமரத் தன்மையை அடையவேண்டும். இந்த நாடகத்தைப் பார்ப்பவர்களில் ஒருவருக்காவது மூலமான உபநிஷத்தைக் கற்கவேண்டும் என்ற ருசியை உண்டாக்குவோமானல் நாங்கள் கிருதார்த்தர்களாவோம்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

ओं शान्तिः शान्तिः शान्तिः ।

ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:

(எல்லோரும் சேர்ந்து பாடுகின்றனர்)

"ஓம் சங்கர, ஓம் சங்கர ஓம் சங்கர ஓம்"

ஸர்வம் ப்ரஹ்ம மயம், ரேரே, ஸர்வம் ப்ரஹ்மமயம்
தேஹோ நாஹம், ஜீவோ நாஹம், ப்ரத்யகபின்ன
ப்ரஹ்மைவாஹம்;
பரிபூர்ணோஹம், பரமார்த்தோஹம்,
ப்ரஹ்மைவாஹம் ப்ரஹ்மாஹம். (ஸர்வம்
ஆனந்தோஹம், ஆனந்தோஹம், ஆனந்தம்
ப்ரஹ்மானந்தம்.
வியாபக சேதன ஆத்ம சிவோஹம்
வ்யக்த அவ்யக்த ஸ்வரூப சிவோஹம்
ஸாக்ஷிஸ்வப்ரகாச நிர்மலோஹம்
நித்யமுக்த நிராகார நிர்குண சிவோஹம். (ஆன)

(திரை விழுகிறது)

கேனோபநிஷத் நாடகம் முற்றும்.

